உ

சிவராமஜெயம்.

# பார்வதி பரணியம்

என்னும்

## விஷவைத்திய சிந்தாமணி.

இஃது,

சிறுமணவூர்

## முனிசாமி முதலியார்

அவர்களா லியற்றப்பட்டு,

இதன் விலை அணா-12.




தபாற்கூலி அணா-2.

தமது

## சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1903.

Registered Copy Right.

உ

சிவராமஜெயம்.

# நூதன புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| இராஜவம்ச பரம்பரை | 0 | 10 | 0 |
| நவகண்டஆரூடம் | 0 | 8 | 0 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 | 0 |
| உயிரெழுத்து மூலிகைமர்மம் | 0 | 8 | 0 |
| கண்கட்டு 1000 வித்தைகள் | 0 | 6 | 0 |
| நிருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| மனிதருடைய மனதை மயக்கி அறிவை விர்த்திசெய்யும் மனமோகனக்கண்ணாடி. | 0 | 8 | 0 |
| வன்னியநாடகம் | 0 | 8 | 0 |
| மதிகெட்டான்நாடகம் | 0 | 5 | 0 |
| ஜம்ந்தர்ஷா சரித்திரம் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம் பாடல் | 0 | 8 | 0 |
| சகாதேவர் சோதிடநாடி | 0 | 6 | 0 |
| சமுதாயகுண சத்தகராதி | 0 | 4 | 0 |
| சுருக்குபஞ்சபட்சி ஆரூடகாண்டம் | 0 | 2 | 0 |
| வாந்திபேதிநிவாரண சிகிச்சாசாரம் | 0 | 4 | 0 |
| பெரிய சிரவசனம் | 4 | 0 | 0 |

ஒவ்வொரு புத்தகங்களுக்கும் புத்தகம் வாங்குகிறவர்களே தபாற்கூலி செலுத்தவேண்டும்.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமிமுதலியார்,

பிரம்பூர் பாரக்ஸ் போஸ்ட், மதராஸ்.

Digitized By Roja Muthiah Research Library



உ

சிவராமஜெயம்.

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில் 1867 வது வருஷத்திய 25 வது ஆக்ட்டின் 20 வது பிரிவின் 6 வது விதியின்பிரகாரம் இந்நூலை கனம்பொருந்திய கெவரன்மெண்டார் அவர்கள் சட்டத்திற்கிணங்க பிறர் யாவரும் அச்சிடாதபடி காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்நூலுக்குடையவராகிய சிறுமணவூர் முனிசாமிமுதலியாரவர்களின் அனுமதியில்லாமல் இதை வேறுபாஷையில் மொழிபெயர்த்தாவது அல்லது இதில் கண்டிருக்கிற பாகங்களையாவது ஒருவரும் அச்சிடலாகாது அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல்செய்யப்படும்.

## முக்கிய கவனிப்பு.

இப்புத்தகமாவது இன்னும் இதரமான புத்தகங்களாவது அவிழ்தங்களாவது தேவையானவர்கள் அடியில்கண்டிருக்கும் விலாசத்தாருக்கெழுதி பெற்றுக்கொள்ளலாம். கேட்லாக்கு தேவையானவர்களுக்கு இனமாக ஒருபுஸ்தகம் அனுப்பப்படும்.

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தலைவர்,

சிறுமணவூர்-முனிசாமிமுதலியார்,

பிரம்பூர் பாரக்ஸ் போஸ்டு, மதராஸ்.

Digitized By Roja Muthiah Research Library





# விஷவைத்யசிந்தாமணி

## அகராதி.



Digitized By Roja Muthiah Research Library

Digitized By Roja Muthiah Research Library

Digitized By Roja Muthiah Research Library

விஷவைத்திய சிந்தாமணி அகராதி

முற்றிற்று.



Digitized By Roja Muthiah Research Library

உ

சிவராமஜெயம்.

# சிவவாக்கியம்

## ஆயிரம் பாடல்.

சப்தரிஷிகளில் ஒருவராகிய பிருகுமகாரிஷியின் புதல்வரான சிவவாக்கியர் என்னும் யோகமூர்த்தியானவர் 400-வருடமளவும் சைவசமயத்தி லிருக்கையில் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களும் புரச்சமய கோளறுக்குமாறு பலசமயத்தையும் கையாண்டுவருவாராகி வைணவசமயத்தை யனுஷ்டித்து (திருமழிசையாழ்வார்) என்னும் திருநாமமுடையவராய் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் தேரத்திரூபமாய் திருவாய்மலர்ந்தருளிய வைணவசமயத் திருப்பாடல்களும் அச்சுக்குவராதிருந்த சில நூற்றுக்கணக்கான அனேகபாடல்களும் (சிவவாக்கியர்) அவதாரஞ்செய்த திவ்விய சரித்திரத்துடன் 1000ம் பாடல் ஒரேபுத்தகமாய் உயர்ந்தகடிதத்தில் அச்சிட்டிருக்கின்றமையால் வேண்டியபுண்ணியவான்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கெழுதி பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை அணா 8. வி. பி. தபாற்கூலி அணா 3.

உயர்ந்த கெடியாரவகைராக்களும், இங்கிலாண்டு கெமிகல் கோல்டு மோதிரவகைராக்களும், ரப்பர்ஸ்டாம்பு முத்திரைகளும், கஸ்தூரி, குங்குமப்பூ, கோரோஜனம், பச்சைக்கற்பூரம் முதலியதுகளும் பூனாதேசத்து வாசனையெண்ணைகளும், உயர்ந்த பஸ்டங்கள், செந்தூரங்கள் முதலிய அவுஷதவகைராக்களும், தமிழ்ப்பாஷையிலுள்ள எல்லாவிதசாஸ்திரங்கள், புராணங்கள், கதைகள், விலாசங்கள், நாடகங்கள் முதலான புத்தகதினுசுகளும், ஜர்மன்சில்வர் நகைசாமான்களும் எங்கள் கம்பெனியில் விலை சரசமய் விற்கிறபடியால் தேவையானவர்கள் பெற்றுக்கொள்ளலாம். அல்லது எங்கள் சாமான்களின் விபரம் அடங்கிய விக்கிரயஜாபிதாபுத்தகம் அச்சிட்டிருக்கிறபடியால் தமதுவிலாசத்தைமட்டும் தெரிவித்தால் ஒரு காட்லாக்குபுத்தகம் அனுப்புகிறோம்.

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தலைவர்,

சிறுமணவூர்-முனிசாமிமுதலியார்

பிரம்பூர் பாரக்ஸ் போஸ்டு, மதராஸ்.

Digitized By Roja Muthiah Research Library



உ

சிவராமஜெயம்.

# பார்வதி பரணியமென்னும்

# விஷவைத்யசிந்தாமணி.



## காப்பு.

சீராரும் பார்வதிநற் றீப்பரணி யாம்நூலைப்,
பாரா ரறியவுரைப் பன்னுதற்கு—நீராரும்
பிஞ்சுமதி கொஞ்சுசடை பெம்மானு ரன்றளித்த
கஞ்சமத வாரணன்றாள் காப்பு.

## நூன்முகம்.

கேளாய்! அகஸ்திய மகாமுனியே நீர் நம்மை வணங்கிக்கேட்டபடியால் விஷப்பிராணிகளின் பூர்வோத்திரங்களை நன்குணர்த்துவோமாக அதாவது, காசிபன்மனைவியாகிய கத்துருவென்பவளின் வயற்றிலுதித்த விஷப்பிராணிகள் அளவிறந்ததாயினும், இந்த அண்டகோடிகளுக்குள் இராநின்ற சர்ப்பங்களில் தலைமையாயும் உத்தமஜாதியாயுமுள்ள சர்ப்பபேதங்களை ஆதியோட்ந்தமாகவும் மற்றுமுள்ள சில விஷபேதங்களையும் கிரமமாகச்சொல்வோம் கேட்டுக்கொள்வாயாக முனிசிரேஷ்டா.

## உத்தமஜாதி சர்ப்பங்களின் பெயர்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 | வாசுகி | 5 | குளிகன் |
| 2 | அனந்தன் | 6 | பதுமன் |
| 3 | தக்கன் | 7 | மகாபதுமன் |
| 4 | சங்கபாலன் | 8 | கார்க்கோடகன் |

ஆக சர்ப்பபேதம்-8.

Digitized By Roja Muthiah Research Library

## ஜாதிபேதம்.

| | |
|---|---|
| வாசுகியென்னும் சற்பமானது | க்ஷத்திரியஜாதி. |
| அனந்தனென்னும் சற்பமானது | பிரம்மஜாதி. |
| தக்கன் யென்னும் சற்பமானது | வைசியஜாதி. |
| சங்கபாலன் யென்னும் சற்பமானது | க்ஷத்திரியஜாதி. |
| குளிகன் யென்னும் சற்பமானது | பிரம்மஜாதி. |
| பதுமன் யென்னும் சற்பமானது | சூத்திரஜாதி. |
| மகாபதுமன் யென்னும் சற்பமானது | வைசியஜாதி. |
| கார்க்கோடகன் யென்னும் சற்பமானது | சூத்திரஜாதி. |



{மேற்படி உத்தமஜாதி சற்பங்கள் இருக்குமிடங்களும் அதினுடைய மணமும், ஆடுந்திசையும், படத்தின் குறியும், நிறமும், வயசும், சொல்லுவோமாக.}

### 1-வது- வாசுகி.

வாசுகியென்னும் சற்பமானது கிழக்குத்திக்கில்விருட்சத்தடியிலிருக்கும் அது இருக்குமிடத்தில் தாழம்பூவாசனை வீசும் மனிதரைப் பார்த்தபடி எதிர்நோக்கி ஆடும் அதின்படத்தில் சக்கரம்போல் குறியும் கருங்குவளைப்பூப்போல் புள்ளிகளுமிருக்கும் அருகன்கிழங்கு, வண்டு, இதுகளைப்புசிக்கும் அதின்திரேகம் பொன்னிறமாயிருக்கும் அதற்கு வயசு-800.

### 2-வது, அனந்தன்.

அனந்தனென்னும் சற்பமானது தென்கிழக்குத்திக்கில் தெய்வஸ்தலத்தில் வாசமாயிருக்கும் அது இருக்குமிடத்தில் நாவிப்பூமணம் வீசும் அண்ணார்ந்துபார்த்து ஆடும் படத்தில் சங்குபோல் குறியும், வெண்டாமரைப் பூப்போல் புள்ளிகளுமிருக்கும் அதற்கு பசிவேளையில் காற்றைப்பிடித்து உணவுகொள்ளும் அதின் திரேகம் சிவந்தநிறமாயிருக்கும், அதற்கு வயசு-1008.

### 3-வது. தக்கன்.

தக்கனென்னும் சற்பமானது தெற்குத்திக்கில் பாழ்மனையில் வாசமாயிருக்கும், அதுயிருக்குமிடத்தில்பாதிரிமலர்வாசனைவீசும், நான்குதிசைகளும்நோக்கி ஆடும், அதின்படத்தில் வில்லைப்போல் குறியும் துவாதசத்தின்வடிவான புள்ளிகளுமிருக்கும், அதின்திரேகம் கம்பிய வெண்மைநிறமாகும், ஓணான், எலி, இதுகளை உணவாக்கொள்ளும், அதற்கு வயசு-500.

Digitized By Roja Muthiah Research Library

## 4-வது, சங்கபாலன்.

சங்கபாலனென்னும் சற்பமானது தென்மேற்குத்திக்கில் மரத்தடியில் வாசமாயிருக்கும், அதுயிருக்குமிடத்தில் தாழம்பூவாசனைவீசும், எதிர்நோக்கியாடும், அதின்படத்தில் திரிச்சூலம்போல் குரியும் அல்லது பிரைபோலுமிருக்கும், கிழங்குதினுசுகளைப்புசிக்கும், அதின்திரேகம் பொன்னிறமாயிருக்கும், அதற்கு வயசு-800.

## 5-வது, குளிகன்.

குளிகனென்னும் சற்பமானது மேற்குத்திக்கில் பாழடைந்த தேவாலயங்களில் வாசமாயிருக்கும், அதுயிருக்குமிடத்தில் மலர் மணம்வீசும், அண்ணாந்துபார்த்து ஆடும், அதின் படத்தில் சங்குபோல் குரியும் சிறுபுள்ளிகளுமிருக்கும், வாயுவைப்பிடித்துஆகாரமாய்க்கொள்ளும், அதின்திரேகம் சிவந்தநிறமாயிருக்கும் அதற்கு வயசு-1008.

## 6-வது, பதுமன்.

பதுமனென்னும் சற்பமானதுவடமேற்குத்திக்கில் புற்றுகளிலிருக்கும், அது யிருக்குமிடத்தில் இலுப்பைப்பூவாசனை வீசும், பூமியைப்பார்த்தபடி ஆடும், அதின்படத்தில் புள்ளடிபோல் குரியும் பஞ்சகோணப்புள்ளிகளுமிருக்கும், அதின்திரேகம்கருமைநிறமாயிருக்கும், மீன், தவளை, இதுகளைப்புசிக்கும் அதற்குவயசு-300.

## 7-வது, மகாபதுமன்.

மகாபதுமனென்னும் சற்பமானது வடக்குத்திக்கில் பாழ்மனைகளில் வாசமாயிருக்கும், அதுயிருக்குமிடத்தில் பாதிரிப்பூவாசனை வீசும், பலதிசைகளையும் நோக்கி நோக்கியாடும் அதின் படத்தில் தனுசைப்போல் குரியும் ராஜவர்த்தனைக்கல்லைப்போல் பிரகாசமான புள்ளிகளுமிருக்கும் அதற்கு ஆகாரம் ஓந்தி, தவளை எலி, நத்தை இதுகளைப்புசிக்கும் அதின்திரேகம் வெண்மைநிறமாயிருக்கும் அதற்குவயசு-500.

## 8-வது, காற்கோடகன்.

காற்கோடகனென்னும் சற்பமானது வடகிழக்குத் திக்கில் புற்றுகளில் வாசமாயிருக்கும் அது யிருக்குமிடத்தில் இலுப்பை மலர் வாசனைவீசும் பூமியைப்பார்த்தபடி ஆடும் அதின்படத்தில் புள்ளடிபோற் குறியும் மூன்றுகண்களைப்போல் புள்ளிகளுமிருக்கும் ஜலத்திலும் குளக்கரையிலுமுள்ள ஊர்வனஜீவன்களைப் புசிக்கும் அதின் திரேகம் மிகவும் கருத்த நிறமாயிருக்கும் அதற்கு வயசு-300.

## அஷ்டநாகங்களின் விபரம்

முற்றுப்பெற்றது.

---

Digitized By Roja Muthiah Research Library

## உத்தமாதிசர்ப்பங்கள் உற்பத்தி.

இதுகள் ஆனிமாதத்தில் புணர்ந்து ஆடி ஆவணிமாதங்களில் வயிறூர்ந்து கார்த்திகைமாதத்தில் பூ பொன் எருக்கம்பூ வெண்மையாகிய நிறங்களாக (238) முட்டைகளிட்டு ஏழுநாள் அபயங்கார்க்குமென்றும் அம்முட்டைகளில் ஆண்முட்டைகள் முகிழ் விரியாத எருக்கம்பூ மொக்கைப்போலும் பெண்முட்டைகள் வாகைப்பூ அரும்பைப்போலும் இரண்டுவிதபேதமா யிருக்குமென்றும் அதையீன்றதாயானது ஏழுநாட்குள் (228) முட்டைகளைப் புசிக்குமென்றும் (4) முட்டைகள் அழியுமென்றும் (19) முட்டைகள் பொரிந்து குட்டிகளாகத் திரியுமென்றும் அக்குட்டிகளுக்கு மயிர்போல் (24) கால்களிருக்குமென்றும் இதுகள் பிறந்த 28-வது நாளில் சூரியனை நோக்கிப் படம்விரித்து ஆடி விஷம்பெற்றுக்கொண்டு தனித்தனியே பிரியுமென்றும் 60-வதுநாளில் தோலுரிக்குமென்றும் 6-வது மாதத்தில் பல்லும் நஞ்சும் வாலும் பிரகாசமாய்த் தோற்றுமென்றும் இதுகள் ஒருவனைக்கடிக்கும்போது கடியுண்டவனுக்கு இறப்புண்டோ இல்லையோவென்று சந்தேகிக்குமென்றும் இவைகளுக்குக் கண்களே காதாகயிருக்குமென்றும் வாய்க்கீழ்வரிசையில் காளி,காளராத்திரி என இரண்டுபல்லுக்ளும் மேல்வரிசையில் எமன் எமதூதன் என இரண்டுபற்களும் உண்டென்றும் இவ்விஷங்கள் மணி மந்திர அவிஷாதிகளுக்கு அஞ்சுமென்றும் சித்தர் ஆரூடவிருத்தப்பா யென்னும் சாஸ்திரங் கூறுகின்றது.

## பலஜாதி சர்ப்பங்களின் உற்பத்தி.

உத்தமஜாதி சர்ப்பங்கள் சித்திரைமாதம் புணர்ச்சியில் இச்சையுண்டாகி ஆனிமாதத்தில் ஆணும் பெண்ணும் இடைவிடாது திரிந்து ஆடிமாதத்தில்கூடி இழைந்து சூலுண்டாகி கார்த்திகை மாதத்தில் ௱-௨௱-௪௱-முட்டைகளிடும் இவற்றுள் சிலமுட்டைகள் பெருங்காற்றினாலும் அதிகதீட்சண்யத்தினாலும்கெடுதியை அடையும் மற்றமுட்டைகள் தனக்குத்தானே விரிந்துடைய அவைகளில் நின்றும் சிறுசிறுகுட்டிகள்வெளிப்பட்டுலவும் இக்குட்டிகளுக்குக் கீழ்வாய்வரிசையில் காட்டுவாகைப்பூ கேசரப்பிரமாணங்களை யொத்து மஞ்சள் நிறமான ஏழுகோரைப்பல்லும்முளைக்கும் இவற்றுள் பகலில் விஷமிருப்பது-௪ ராத்திரியில் விஷமிருப்பது-௩ இவ்விஷம் ௪-௩ யென்னும் துளிகணக்காகவிழும் இக்கோரைப்பல்லுகள் வருஷத்திற்கொருதரம் விழுந்துமுளைக்கும் இவ்வித விஷசர்ப்ப ஜாதிகள்-௪௰-விதமும் விஷமில்லாத சர்ப்பஜாதிகள்-௪௪ - விதமுமாம் இவற்றுள் பிரம க்ஷத்திரிய வைசியசூத்திரரென்னும் ௪-ஜாதி சர்ப்பங்களும் ஆண் பெண் அலியென்னும் ௩-குறிப்புகளையுள்ள

Digitized By Roja Muthiah Research Library

சர்ப்பங்களும், மலடென்னும் நோய்க்குறிபெற்ற சர்ப்பமும், பால்யம், யௌவனம், விருத்தாப்பியமென்னும் முப்பருவங்களையுடைய சர்ப்பங்களும் உண்டு இவைகளுக்கு ஆயுசு 1000, 800, 500, 300, 200 100, 26, யென்னும் வருஷங்களாம் சிலஜாதிகளுக்கு ஆயுசு 5, 20 50, 55, யென்னும்வருஷங்களாம் இச்சர்ப்பஜாதிக்குள் பிறக்காமல் பசுவின்நாசியில் ஜனித்துவருகின்ற சர்ப்பம் ஒருவித முண்டென்றறிக ஆனால் சூரியவெப்பம் மிகுந்ததேசத்திலிருக்கின்ற சர்ப்பங்களுக்கெல்லாம் விஷம் அதிகமாம்.

## 1-வது பிர்மசர்ப்பம்.

இது மேற்புறத்தில் வெளுப்பு கருப்பு சிவப்பு கபிலம் என்னும் நிறங்களையும் படத்திற் சங்கத்தின்வடிவான புள்ளிகளையும் அதிகச்சீறலுடன் கோபத்தையும் தாமரைப்பூ குருவேர் வெட்டிவேர் காட்டுவாகைப்பூ குங்கிலியம் நாபி ஆகிய இவைகளின்மணங்களையும்பெற்று ஆலயங்களில் சஞ்சரிக்கும் இது படம்விரித்து ஆடும் போது ஆகாயத்தைப்பார்த்து நின்றும் காற்றையும் பூமணத்தையும் புசிப்பாகக்கொள்ளும் இதற்குவயசு 1008 என்றறிக அன்றியும் இது ரத்தநிறத்தைப்பெற்றுச் சனிவாரத்தினிரவினும் ஆதிவாரத்திலும் இரையெடுக்குமென்று உதையமுதல் பத்துநாழிகைவரைக்கும் வெளியில்திரியுமென்றும் கடிக்கும்போது முன்பக்கத்திலும் வலப்பக்கத்திலுங்கடிக்குமென்றும் அக்கடியினால் வாதமே அதிகரிக்குமென்றும் சித்தர் ஆரூடமென்னும் சாஸ்திரம் சொல்லுகின்றது.

## 2-வது, க்ஷத்திரியசர்ப்பம்.

இது மேற்புறத்தில் பொன் பேரீச்சம்பழம் திராட்சப்பழம் நாவல்பழம் யென்னும் நிறங்களையும் படத்தில் சந்திரன் சங்கு சக்கரம் கலப்பை ஆகியவிவைகளையொத்த புள்ளிகளையும் மிகுந்த பகையுடன் கோபத்தையும் சிவந்தநேத்திரத்தையும் சாசிப்பூ செண்பகப்பூ தாழம்பூ புன்னைப்பூ அருகங்கட்டையென்னும் இவைகளின் மணத்தையும் பெற்று விருக்ஷப்பொந்துகளில் வாசஞ்செய்யும் இது படம்விரித்தாடும்போது சமபார்வையுடன் ஆடும் அருகின்கிழங்கையும் வண்டையும் உணவாகக்கொள்ளும் இதற்குவயசு 800 என்றறிக அன்றியும் இது சனிவாரப்பகலிலும் சோமவாரத்திலும் எலியை இரையாகக்கொள்ளுமென்றும் பகலில் உதையம் பத்துநாழிகைமுதல் இருபதுநாழிகைவரைக்கும் வெளியில் திரியுமென்றும் இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் கடிக்குமென்றும் அக்கடியினால் பித்தமே அதிகரிக்குமென்றும்சிலநூல்கூறுகின்றன.

## 3-வது, வைசியசர்ப்பம்.

இது மேற்புறத்தில் வச்சிரம் கோமேதகம் புரு இதுகளின் சாயலையும் உடல்முற்றிலும் சிகப்பு வெளுப்பு மஞ்சள் புகை இது

Digitized By Roja Muthiah Research Library

கள்நிறஞ்சேர்ந்த விருத்தாகாரமும் வில்லுருவமும் ஒத்தபுள்ளிக ளேயும் பாதிரிப்பு பால் நெய் வெள்ளாடு செம்மறியாடு இவைகளின் மணத்தையும் பெற்று மனைகளில்வாசஞ்செய்யும்.

இது படம்விரித்து ஆடும்போது நாலுதிசையிலும் பார்த்து நின்றாடும் ஒந்தியையும் எலியையும் உணவாகக்கொள்ளும் இதற்கு வயசு-500 என்றறிக அன்றியும் இது சுக்கிரவாரத்திலும் மங்கள வாரத்திலும் தவளையை இரையாகக்கொள்ளுமென்றும் உதையாதி இருபதுநாழிகைமுதல் முப்பதுநாழிகைவரைக்கும் வெளியில்திரி யுமென்றும் இடப்புரத்திலும் பின்புறத்திலும் கடிக்குமென்றும் அக்கடியினால் கபமே அதிகரிக்குமென்றும் விஷநூல் சொல்லு கின்றது.

## 4-வது. சூத்திரசர்ப்பம்.

கரி கோதுமை நிறங்களையும் உடலெல்லாம் புள்ளடிபோன்று சிறுத்து நீண்டபுள்ளிகளையும் யானை காட்டெருமை அழுகியசேறு ரத்தம் இலுப்பைப்பூ இவைகளின்மணத்தையும்பெற்று புத்துக ளில் வாசஞ்செய்யும இது படம்விரித்து ஆடும்போது பூமியைப் பார்த்துக் கவிழ்ந்துநின்றாடும் தவளை மீன் இவைகளை உணவாகக் கொள்ளும் இதற்குவயசு-200 என்றறிக அன்றியும் இது மந்தவா ரத்திலும் குருவாரத்திலும் எலிமுதலியசகலத்தையும் இரையாகக் கொள்ளுமென்றும் வைசிய சர்ப்பத்தைப்போலவே கடிக்குமென் றும் அந்தக்கடியினால் தொந்தகபம் அதிகரிக்குமென்றும் சிலநூ லிற் சொல்லப்படுகின்றன இந் நான்குஜாதிசர்ப்பங்கள் தவிர மற் றச்சங்கர ஜாதிசர்ப்பங்கள் கடிப்பதற்குப் பக்கபேதமும் ஸ்தான பேதமு மில்லையென்றறிக.

### உத்தமஜாதிசர்ப்பங்களுடைய
### பற்களின் பெயர்.

முதற்பல்லின்பெயர்—காளி.
இரண்டாம் பல்லின்பெயர்—காளாத்திரி.
மூன்றாம் பல்லின் பெயர்—எமன்.
நான்காம் பல்லின் பெயர்—எமதூதன்.

இந்தப்பற்கள் நான்கில் காளி காளாத்ரி யென்னும் இரண்டு பற்கள் மேல்வரிசையிலும் எமன் எமதூதனென்னும் இரண்டுபற் கள் கீழ்வரிசையிலுமிருக்கும் இதுகட்கு தொட்டியைப்போன்ற சிறுதுளைக ளுள்ளனவாம் சர்ப்பம் கடிக்கும்போது அந்தத்துளை யின்வழியாய் விஷம் சுழன்று கடிவாயிலிரங்கும் இரங்கினவுடன் 96-மாத்திரைதின்று ஒவ்வொருபல்லுக்கும் உடையபாகம்போல் அதிவிரைவில் இரத்ததாதுவிற்பாய்ந்துமேலுக்கேரி தத்தமதுஜாதி பேதப்படிமனிதருக்கு இடுக்கணுண்டாக்கும்.

Digitized By Roja Muthiah Research Library

## விஷநீர் அடையாளம்.

காளியென்ற பல்பட்டால் பனிஜலம்போல் நீர்கசியும்
காளாத்திரியென்ற பல்பட்டால் மஞ்சள்நிறநீர்கசியும்
எமன்யென்ற பல்பட்டால் சென்னீர்கசியும்
எமதூதனென்ற பல்பட்டால் கழுநீர்போல் கசியும்.

## பல்லின் அடையாளம்.

காளியென்ற பல்பட்டயிடம் புள்ளடிபோலிருக்கும்.
காளாத்திரியென்ற பல்பட்டயிடம் முக்கோணம்போலிருக்கும்.
எமன்யென்ற பல்பட்டயிடம் வில்லைப்போல் காயமிருக்கும்.
அல்லது பிறைபோல் அழுந்தியிருக்கும்.

---

## கடி கணக்கு.

| | | |
|---|---|---|
| ஒருபல் பட்டால் | (கால்கடி) | யென்றறியவும் |
| இரண்டுபல் பட்டால் | (அரைகடி) | யென்றறியவும் |
| மூன்றுபல் பட்டால் | (முக்கால்கடி) | யென்றறியவும் |
| நான்குப்பல் பட்டால் | (முழுக்கடி) | யென்றறியவும் |

## விஷ கணக்கு.

ஒருபல்லு பட்டால் விஷமானது தோலைப்பற்றியேறும்.
இரண்டுபல் பட்டால் விஷமானது மாமிசத்தைபற்றியேறும்.
மூன்றுபல் பட்டால் விஷமானது எலும்பைப்பற்றியேறும்
நான்குபல்லும் பட்டால் விஷமானது மூளையைப்பற்றியேறும்.

### விஷப்பல்லின் சாத்தியா சாத்தியம்.

ஒருபல் அழுந்தினல் அந்தவிஷம் மூலிகைசிகிச்சையால் தீரும். இரண்டுபல் அழுந்தினல் அவ்விஷம் மணிமந்திர அவுடத்தால் தீரும். நான்குபல்லும் அழுந்தினல் அவ்விஷம் நீக்குவது அசாத்தியமாகும்.

## மீளாக்கடி.

ஒரே பல்லு அழுந்தினபோதிலும் அந்தபல் அழுந்தினஇடத்திலிருந்து இரத்தம் வடிந்தாலும், அல்லது பல் அழுந்தின இடத்தில் (திருகியதுபோல்) சக்கராகாரமாகத் தோற்றினலும், அந்த இடம் ஆமை ஒட்டைப்போல் மேலெழும்பித் தடித்து வீங்கினலும் அசாத்தியமாகும். ஆகிலும் மணிமந்திர அவுஷதவலியும், தெய்வவலியும் விதிவலியும் திடமாயிருக்குமாகில் கஷ்டத்தின்பேரில் உயிர் மீண்டுவரும்.

Digitized By Roja Muthiah Research Library

## தாடைபல்லின் லக்ஷணம்.

சில சர்ப்பங்களுக்கு தாடைக்குள் முள்ளைப்போல்ஒவ்வொரு கோரைப்பல் முளைத்திருக்கும் அந்த கோரைப்பல் பட்டு விஷம் ஏறுமானால் உடனே அபாயமாய் அவ்விஷம் மீளாது.

## கடியின் அசாத்திய நிறம்.

சர்ப்பங் கடித்தயிடத்தில் கருப்புநிறமாகவும், கனிந்தநாவல் பழநிறமாகவும், இருந்தால் அவ்விஷம் மிகவும்கொடியதென்றறிக.

## கடிமணத்தின் நிதானம்.

சர்ப்பங்கடித்தயிடத்தில் முகர்ந்தும்பார்த்தால் தாழைமலர் வாசனைவீசினால் நல்லபாம்பென்றறறியவும், புளியம்பூ வாசனைவீசினால் மண்டலி பாம்பென்றறியவும், சுக்கு மிளகு, இவைகளின் வாசனைவீசினால் சிறியபாம்புயென்று நிதானிக்கவும், இந்த மணம் யாதொன்றும் வீசாமலிருந்தால் சில்லரைவிஷங்களென அறியவும்.

## மரணஸ்தானம்.

மனிதருடையதலை, நெற்றி, புருவமையம், தாடை, உதடு, நெஞ்சு, உள்ளங்கை, மார்பு, ஸ்தனம், அக்குள், தொப்புள், ஆண்குறி, அல்லது பெண்குறி, குதம், உள்ளங்கால், இந்த இடங்களில் சர்ப்பந்தீண்டுமாகில் தப்பாமல் மரணமேயாம்.

## திதிபேத மரண நிதானம்.

பருவம், அமாவாசை, பஞ்சமி, பிரதமை, அஷ்டமி, நவமி, இந்த ஆறுதிதிகளில் சர்ப்பங்கடித்தாலும் மயானத்தில் சர்ப்பங்கடித்தாலும் பலபேர்கூடும்பொதுமரத்தடியில் கடித்தாலும் சூரிய உதயத்திலாவது, மாலைமயங்கும் காலத்திலாவது அசந்து நித்திரைசெய்கிற காலத்திலாவது பாதிராத்திரியிலாவது சர்ப்பக்கடிக்குமாகில் மரணமாம்.

## நட்சத்திரபேத நிதானம்.

பரணி, கார்த்திகை, ஆயிலியம், விசாகம், பூரம், பூரட்டாதி பூராடம், சதையம், மகம் திருவோணம், மூலம், சித்திரை, சோதி இந்த நட்சத்திரங்களும், இந்த நட்சத்திரத்துடன், பூரணபருவம் அமாவாசைகூடின தினமானாலும் தன்னுடைய ஜென்மநாளிலும் சர்ப்பங்கடிக்குமாகில் அசாத்தியமாமென்று சிலநூலில் சொல்லுகிறது.

Digitized By Roja Muthiah Research Library

## சர்ப்பந் தீண்டப்படா
## அசாத்திய இடங்களாவன.

| | |
|---|---|
| பிடாரிகோவில் | மூங்கில்புதரு |
| துர்க்கைகோவில் | நந்தவனம் |
| பாழுங்கோவில் | பிரப்பம்புதர் |
| ஐயனார்கோவில் | மசானம் |
| யாகசாலை | நாணல்புதர் |
| பாழும்வீடு | ஏரிக்கரை |
| பாழூறு | நதிக்கரை |
| ஆலமரத்தடி | சுனைக்கரை |
| அரசமரத்தடி | நீரில்லாத்தாமரைக்குளம் |
| புன்னைமரத்தடி | மூகத்துவாரம் |
| புளியமரம் | புதுமனை |
| முருங்கைமரம் | தேரடி |
| சந்தனமரத்தடி | புத்து |
| வீட்டிலிறப்பிலிருந்து | நாலுசந்திநடு |

மேற்கூறிய இடங்களிலிருந்து உத்தமஜாதி சர்ப்பமாவது சங்கரஜாதி சர்ப்பமாவது எந்த சர்ப்பம் கடித்தாலும் அந்த விஷம் அசாத்தியமாமேயன்றி லகுவில் இரங்காது பிழைப்பானென்கிற நிச்சயம் கிடையாது.

### கடித்த சர்ப்பத்தின்கடினக்குறி.

மனிதரைக்கடித்த சர்ப்பமானது கடித்தவுடனே படத்தை விரித்து ஆடினாலும் தரையில் புரண்டாலும் கடித்த யிடத்தில் ஆடி பின்பு அசைவற்றுயிருந்தாலும் கடியுண்டவனுக்கு விஷம் மீளாதென்றறிக.

### அற்ப விஷங்கள்.

பசி, தாகம், விபாதி, கிரியைக்கண்டு விரண்டோடல் அக்கினிபட்டு மீண்டோடல், தோலுரித்தல் விஷங்கக்குதல் இவைகளால் மெலிந்தசர்ப்பங்களும் தற்பைப்புதை முள் எரும்புப்புதை இவ்விடத்திலுள்ள சர்ப்பங்களும் மந்திரவாதிகள் இருக்கிற வூரிலுள்ள சர்ப்பங்களும் வர்ணயீனம் (அதாவது) கீழ்ஜாதிப்பாம்புகளும் கடிக்குமாகில் அது அற்பவிஷமென்றறிக இவ்விஷங்கள் சுளிதில் நிவர்த்தியாகும்.

### கடியாக்கடி.

கடிவாயினிடத்தில் அணுவேனும் விஷம்பட்டால் மாத்திரம் எரிச்சல் அக்கினிபட்டகுணம் கடிவாயில்தினவு, நோவு, வீக்கம்,



Digitized By Roja Muthiah Research Library

யெச்சம், கண்சோர்வு, சீட்டல், இக்குணங்கள்உண்டாகும் இந்த சகுணங்கள் இல்லாவிட்டால் அந்தமனிதன் சர்ப்பத்தின்வாய்க்கு சம்பந்தப்பட்டு விதிவலிவால் மீண்டானேயன்றி விதியும் விஷமும் சம்பந்தப்பட வில்லையென்றறிக (அதாவது) பாம்பை அடித்து பய ந்து மருண்டு விரண்டோடி மயங்கிப்பிதற்றுகிரா னென்றறிக இந் தமயக்கம் தந்திரத்தால் நிவர்த்தியாகும்.

விஷபரிட்சை.

சர்ப்பங் கடித்தவுடன் கசப்புவஸ்துகளைத் தின்றால் அந்த சுவை மாறுபட்டு இனிப்பு, துவர்ப்பு, புளிப்பு, முதலியசுவைதோ ற்றினாலும் தலைமயிரைப்பற்றி யிழுத்தால் நோவு தெரியாதிருந் தாலும் காதைமூடினால் உள்ளிரைச்சல் இல்லாதிருந்தாலும் சூரி யன், சந்திரன அக்கினி அல்லது விளக்கு இதுகள் கண்ணுக்கு த்தோற்றாதிருந்தாலும் தன்விரல் நகங்களைக்கிள்ளினாலும் விஷம் தலைக்கேறினதென்று நிதானித்து உடனே சகலசிகிச்சையும் செய் யவேண்டும்.

உயிர்நிலை.

விஷத்தினால் உயிர் அடங்கி யிருக்குங் காலத்தில் கண்கள் மேல் நோக்கியிருக்குமாகில் உயிரானது ஊர்த்துவாகாயமான மே ற்புரம்நோக்கி லலாடத்தில் யிருக்குதென்றறியவும் கண்களானது கீழ்நோக்கியிருக்குமாகில் உயிர் கீழடங்கி யிருக்குதென்றறியவும் கண்களானது பக்கங்கள்நோக்கியிருக்குமாகில பக்கங்களில் ஒடுங் கியிருக்கிறதென்றறியவும் கண்களானது விழித்தபடியேஎதிநோ க்கி சமபார்வையாய் இமைசிமிட்டாதிருந்தால் உடலைவிட்டு உயிர் நீங்கிப்போய்விட்டதென் றறியவும்.

உயிர்பரிட்சை.

விஷத்தால் இரந்தவனது தேகத்தில் பிரம்பு கொண்டடிக் கில் த்டித்தாலும் அல்லது வெதுப்பலோடு சிவந்தாலும் அச்சவ த்தை குளத்தில் போட்டால் அழுத்தினாலும் அல்லது சுத்தஜெ லத்தை மேலேகொட்டினால் உடம்பு குளிர்ச்சிகண்டு ரோமஞ்சிலி ர்த்தாலும் கைவிரல் கால்விரல்களை குலிக்கி யிழுத்தொடிக்கை யில் நெட்டம் ஒடிந்தாலும் தலைமயிரைப்பற்றி யிழுத்தால் சொ ற்பவலியுடன் அருகளிப்புகண்டாலும் தாதுக்களில ஒன்றுவது சொற்ப நடையாகக்கண்டாலும் உயிர் அடங்கி யிருக்கிறதென்று நிதானித்து உடனே பலவித சிகிச்சைகளையும் செய்தால் பிழைப் பான் ஆதலால் விஷத்தினால் உயிர் அடங்கிய சவத்தை (90) தொ ண்ணூறு நாழிகை வரைக்கும் தகனம் செய்யக்கூடாதென்று சத் தியாரூடம் சித்தராரூடம் நாகாரூடம் இன்னும் சிலசாஸ்திரங்கள் கூறுகின்றது.

Digitized By Roja Muthiah Research Library

### சர்ப்பங்கடிப்பதற்குக் காரணம்.

தன்பசிக்காகவும், பயந்தகாலத்திலும், கோபத்தினாலும்பூர்வகுரோதத்தினாலும், தன்னை மிதித்தாலும், வைராக்கியத்தாலும் சாபத்தினாலும், ஏவலினாலும் தெய்வகதியினாலும், காலகதியினாலும் கோரைப்பல்விஷம் அதிகரித்தாலும், சர்ப்பங்கடிக்க நேரிடுகிறதென்றறியவும்.

### சர்ப்பவருக்கச் சத்துருவகை.

சர்ப்பங்களுக்கு இருதலைமணியன் செந்நாய், மயில், கோழி, எருதின் குளம்பு, மின்னல், இடி, கீரி, கரடி, பன்றி, செம்போத்து கருடன், முதலை, ஆந்தை, கூகை, மான், புதுவெள்ளம், புகைமூடிய அனல், முதலியவைகளும் மனிதரும் சத்துருக்களாம்.

சங்கிரமஜாதியென்னும்

# பல்ஜாதிசர்ப்பபேதம்.

### பௌமசர்ப்பஜாதிபேதம்.

பௌமசர்ப்பம் என்பது தருவீகரம் மண்டலி, ராஜமந்தம் நிர்விஷம், வைகரஞ்சம், என ஐவகைஜாதியை உடைத்தாய்முறையே உசு-ௐ-ருள-௨-ௐ-என்னும் அஉ-பேதங்களைப் பெற்றிருக்கின்றது ஆயினும் தருவீகரம் மண்டலி ராஜமந்தம் எனக்கூறிய மூவகைச் சர்ப்பங்களுக்குள் பிறக்கிற சங்கரமசர்ப்பஜாதி பேதங்களுக்குக் கணக்கில்லையென்றறிக இங்கனம் கூறிய ஐவகை சர்ப்பஜாதிகளுக்கும் பௌம சர்ப்பங்களெனப் பெயராம் பூமி சம்பந்தம் பௌமம்.

### தருவீகர சர்ப்பம்.

இது மிகுந்த வேக நடையைப் பொருந்தி படத்திலும் சர்வாங்கத்திலும் வண்டிக்கண்-கலப்பை, குடை, துவசம், அங்குசம் என்னும் உருவங்களையொத்த புள்ளிகளைப் பெற்றிருக்கும் இதன் விஷமானது கொஞ்சம் உஷ்ணத்துடன் புளிக்கும் இது தலைக்கேறினால் முகம், கண் நகம் சருமம் மூத்திரம் ஆகிய இவைகள் கறுக்குதல் சிரசில் பாரிப்புடன் நோவு தலைசுழல் தேககனதி வயிற்றிற் சூலை எரிச்சல் பொருமல் முதுகில் குத்தல் எலும்பு நரம்பு இடுப்பு இவ்விடங்களில் வேதனை தாளிறுகல்இருமல் இரைப்பு கொட்டாவி நித்திரைபங்கம் அரோசகம் மல மூத்திரக்க

ROJA MUTHIAH

Digitized By Roja Muthiah Research Library

ட்டு நெஞ்சிற் களகள வென்னும் ஒருசத்தம் விக்கல் பேசக்கூடாமையான ஈனத்தொனி ஏப்பம் வாயில் நொப்பும் நுரையும் விழுதல் அறிவுநீங்குதல் என்னும் இக்குணங்களுடன வாதசுபாவக்குறி யெல்லாம் உண்டாகும் இதற்கு ஏழுவேகம் உண்டு அவையாவன.

1 - வது வாயில் ரத்தங்கசப்பி முகம் நேத்திராதி இந்திரியங்களும் கருத்து சரீரத்தில் பூச்சி யூருதல்போல் இருக்குதல்.

2 - வது சர்வாங்கமும் வீங்குதல்.

3 - வது சிரசு கனத்து கண்சிவந்து பல்லுகளில் நோயுண்டாகுதல்.

4 - வது நுரைநுரையான வாந்தியும் எலும்பின் சந்திகளுள் நோவும் பிறக்குதல்.

5 - வது சகலகீல்களிலும் உபத்திரவம் உண்டாகி விக்கலும் தாகமும் அதிகரிக்குதல்.

6 - வது மார்பு அடைப்புடன் தேகம்பாரித்து மூர்ச்சைகண்டுபேதியாகுதல்

7 - வது முதுகு தோள் யிடுப்பு ஆகிய இடங்களில் வேதனை உண்டாகி அவயவங்களில் கொதிப்பேரி சுக்கிலநாசம் அடைகுதல் என்பனவாம்.

இந்த ஏழுவேகத்தில் ஐந்துவரைக்கும் சிகிச்சைசெய்யலாம் அதற்குமேல் அவுஷதம் நாசமாம் இது கரண்டியைப்போல் படமுள்ளதாகையால் தருவிகர சர்ப்பம் எனப்பேர்பெற்றது இதுநொச்சில் கருந்துளசி தும்பை கஞ்சாங்கோரை பருத்தி சிறுதேக்கு கொட்டாங்கரந்தை என்னும் ஏழுசரக்கையும் சிறுநீரில் ஊரவைத்து நசியங்கட்டத்தீரும்.

அல்லது குப்பைமேனி சுக்கு மிளகு வேலி வெள்ளுள்ளி என்னும் ஐந்துசரக்கையும் சிறுநீர்விட்டுநருக்கிப்பிழிந்துநசியஞ் செய்ய விஷம் இறங்கும் சிந்தில் கிழங்கையாவது கோவைக்கிழங்கையாவது சிவிச்சிவி ஒரு ஆழாக்குரசம் எள்ளில் தங்கும்படிக்கித் தின்னச்சொல்ல விஷம் மீளும்.

## மண்டலிசர்ப்பம்.

இது மந்தநடையை உடைத்தாய்சிரசில் அனேகபேதவன்னமாய் மண்டலாகார உருவங்களையொத்த புள்ளிகளைப்பெற்றிருக்கு மிதன்விஷமானது மஞ்சள் நிறத்துடன் காரமாக உரைக்கும் இது தலைக்கேறினல் கடிவாயில் சுடுகையாயிருக்கும்வேதனை

Digitized By Roja Muthiah Research Library

யுடன்குத்துதல் எரிதல் நோதல் முகம் மினுமினுத்து மஞ்சளை ப்போலிருத்தல் அவ்வாறே சகலவஸ்த்துக்களும் காணப்படுதல் தலைநோகல் வயிறுகருத்தல் வாயுலரல் சுரம் தாகம் நரம்புகளுப் புதல் நாசியிலும் வாயிலும் அக்கினிச்சுவாலைபோல் சுவாசம் வருதல் பதாதிகேசம் வரைக்கும் புகைசூழ்ந்தது போலிருத்தல் மூர்ச்சை சீதளத்தில் விருப்பம் என்னும் இக்குணங்களுடன் பித்த சுவாசக்குறியெல்லாம் உண்டாகும் இதற்கு எழுவேகமுண்டு அவையாவன.

1-வது குளிர்ச்சியானரத்தம் வடிந்து வாயுங்கண்ணுங்கருத்துத் தேகத்தில் பூச்சியூருதல்போல் இருக்குதல்.

2-வது தாகமும்வீக்கமுங்காணுதல்

3-வது பல்லுகள் கருக்குதல்

4-வது சர்வாங்கத்திலும் எரிச்சல் எழும்புதல்

5-வது சப்ததாதுக்களும் துர்ப்பலம் உண்டாகுதல்

6-வது வாழைத்தண்டைப்போல் தேகஞ்சில்லிடல்

7-வது தன்னைமரக்குதல் என்பனவாம்.

சுருட்டை, பனையன், விரியன், முதலிய பாப்புகளுக்கு மண்டலிசர்ப்பம் யெனப்பெயராம் இவ்விஷயங்களுக்கெல்லாம் புங்கம் வேர் விளாப்வேர் கிருஷ்ணசூரிகைவேர் இம்மூன்றையும் சமமாக நிறுத்து முருங்கைப்பட்டை ரசத்தினால் அரைத்துக் கடிவாயில் நன்றாக லேபனம்பண்ணி உள்ளுக்குப் பாகலிலை ரசங் கொடுக்க இறங்கும் வாகைப்பூவைப் பாலில்பிசைந்து வடிகட்டிக்குடிக்கில் திரணமண்டலி விஷந்தீரும்—திரணமண்டலி என்பது புல்விரியன்.

## ராஜமந்தசர்ப்பம்.

இது அதிகமந்தநடையை உடைத்தாய் சிரசிலும் உடலின் மேலிலும் கீழிலும் பக்கங்களிலும் மினுமினுத்து சித்திரவன்னங்களையொத்தப் புள்ளிகளைப்பெற்றிருக்கும் இதன் விஷமானது குளிர்ச்சியுடன் தித்திக்கும் இது தலைக்கேறினால் கடிவாயில் குளிர்ச்சியோடு வீங்குதல் சோம்பல் முகமும் நகமும் வெளுக்குதல்சரீரம் நமச்சல் பாரிப்பு மரத்தல் கேசாதிபாதம்வரைக்கும் மினுமினுத்து சில்லிடுதல் சிரசும்கண்ணும் நாசியும் குளிர்ச்சியாகுதல் சிரோபாரம் சுரம் வாய்இனிப்பு அரோசகம்வாந்தி இருமல்மேற்சுவாசம் தாகம் பொறுத்துப்பொறுத்துப் பெருமூச்சுவருதல்நெஞ்சிற் களகளவென்னும் ஒரு சத்தத்துடன் தினவு அடிக்கடி அலரல் ரோமச்சிலிர்ப்பு வாயில் நொப்பும் நுரையுந்தள்ளுதல் மார்பு நூடித்தல் மனச்சங்கடம் மயங்கிய நித்திரையென்னும்இக்குணங்க

Digitized By Roja Muthiah Research Library

ளுடன் சிலேஷ்மசுபாவக்குறியெல்லாம் உண்டாகும் இதற்கு ஏழு வேகம்உண்டு அவையாவன,

1-வது, ரத்தமானது வெண்மையாய் முறிந்து தேகமுங்கண்ணும்வெளுக்குதல்.

2-வது, சர்வாங்கமும் வீங்குதல்.

3-வது, கண்ணிலும் மூக்கிலும் வாயிலும் ஜலம்வடிதல்.

4-வது, சிரோபாரமும் தாள்பிடிப்பும் உண்டாகுதல்.

5-வது, பேசக்கூடாதவருத்தமும் குளிர்சுரமுங்காணுதல்.

6-வது, தேகங்கனத்து சில்லிடுதல்.

7-வது, அவயவங்களெல்லாங் கொதித்துமூர்ச்சையுண்டாகி தன்னைமறக்குதல் என்பனவாம்.

மலைப்பாம்பு நாசரிப்பாம்பு கட்டுவிரியன்முதலியவைகளுக்கு ராஜமந்தம்எனப்பெயராம்.

இவைகட்குக் காட்டுக்கருணை பழுகாமல்சிந்தில்கோவையென்னும் கிழங்குவகை-௪ சுண்டை கிளிமூக்கு வெட்டிவேர் செந்தொட்டி நீலி மருக்காரை வெற்றிலை பேய்பீர்க்கு பாலை ஊமத்தை செப்புநெருஞ்சில் வெண்சாரணையென்னும் வேர்வகை 12-ம் ஆகிய இப்பதினாறுவகையையும் தனித்தனியே வஸ்திரகாயம்பொடிசெய்து சமமாகநிறுத்திக் கலந்துவைத்துக்கொண்டுஇதில்அரைப்படியும் அரிசிஅரைப்படியும் சேர்த்துப்பொங்கி உண்ணக்கொடுக்கில விஷமேறுது ஏறியவிஷமிறங்கும்.

கௌதேர சர்ப்ப பேதம்.

கௌதேரசர்ப்பமானது 92-விதப்படும். இவைகளின் விஷங்கள் தருவீசகர்ப்பவிஷங்களைப்போலவே யிருக்கும் ஆனல் இவைகளில்நின்றும் பிறக்கின்ற சங்கரசாதிகள் அனந்தமென்றறிக இதனைச் சாரைப்பாம்பென்பர்.

நிர்விஷ சர்ப்ப பேதம்.

நிர்விஷசர்ப்பமானது திவ்யகம் சாலகம் பாதகம் விருட்சசாயி கலதி புட்கரம் க்ஷீரி வாகினி சரிவாகி வருஷாப்புலிகம் சோதிரதம் சுட்கம் கோத்திரம் பலாசுகம் காபட்சம்பிலவோற்பேதம் என 16-விதப்படும் நிர்விஷமென்பது விஷமில்லாதசர்ப்பமாம்.

நிர்விஷ லட்சணம்.

விஷமில்லாதசர்ப்பங்கள்கடித்தால் அக்கடிவாயில் ஆமைமுதுகைப்போல் தடித்து அச்சருமங்கறுத்து அற்பசோம்பலுண்டாகும்.

Digitized By Roja Muthiah Research Library

## வைகரஞ்ச சர்ப்பம்.

இது மூவிதப்பேதங்களை உடையதாயிருந்தாலும் இவற்றின் விஷம் அதிகமான வேகத்தைப்பெற்றிருக்கும் இதற்கும் தருவிகரச் கிகிச்சை உதவும்.

## ஆண் சர்ப்பம்.

இது அகலமுள்ளபடத்தையும் அதிகதிடத்தையும் மிகுந்த சிறலையும் பெற்றிருக்கும் இவ்விஷபம் தலைக்கேறினால் மேல்நோக்கியபார்வையும் வலதுகால் பூமியில்பாவாதிருக்குதல் ஊர்த்துவகாயத்தில் மிகுந்தபலயீனமென்னும் யிக்குணங்களுண்டாகும்.

## பெண் சர்ப்பம்.

இது குறிகியபடத்தையும் அற்பச்சிறலையும் பெற்றிருக்கும் இவ்விஷத்தினால் கீழ்ப்பார்வையும் இதினுடையகால் பூமியில்பாவாதிருத்தலும் அதேகாலத்தில் பலயீனமுண்டாகும்.

## அலி சர்ப்பம்.

இது மிருதுவுடன் நீண்டஉருவத்தையும் வெளுத்தபடத்தையும் மந்தநடையையும் குறைந்ததொனியையும் அற்பகோபத்தையும் உடையதாயிருக்கும் இவ்விஷத்தினால் ஈனத்தொனி பேதி கடுக்கல் பயம் சுரம் புணர்ச்சியினிச்சை சரீரம் காற்றில்பறப்பதுபோலிருத்தல் என்றும் இக்குணங்களுண்டாகும் இச்சர்ப்பம் பிறந்த 3-தினத்தில் விருத்தியடைவதும் இவ்வியசர்ப்பத்தால் அடிபடுவதுமாயிருக்கும்.

## மலட்டுச்சர்ப்ப விஷம்.

இது சீக்கிரத்தில் அனந்தம் வேதனையைப் பிறப்பித்தாலும் முக்கியமாக வியர்வையை விஸ்தாரம் ஒழுகச்செய்யும்.

## பாலியசர்ப்ப ஆண்விஷம்.

இது இடதுகண்ணைக் கோவைப்பழம்போல் சிவக்கச்செய்யும் பெண்சர்ப்பக் குட்டி விஷத்திற்கு இக்குணம் கொஞ்சம் பேதிக்கும்.

## யௌவனசர்ப்ப ஆண்விஷம்.

இது வலப்பக்கத்தில் கடிக்கும் இவ்விஷத்தால் அப் பக்கத்துக்கண் இரத்தம்போற்சிவக்கும் பெண்சர்ப்பம் இடப்பக்கத்தில் கடிக்கும் இவ்விஷத்தினால் தடிப்புத்தடிப்பாகச் சில ரோகங்கள் பிறக்கும்,

## விருத்த சர்ப்பவிஷம்.

இது கடித்தவாயில் வீக்கம் அற்பநோய் பிதற்றல் இவைகளைத்தரும்.

Digitized By Roja Muthiah Research Library

### கோப்ப சர்ப்பவிஷயம்.

இது சிரசு உதடு வயிறு தொடை ஆகிய இடங்களில் நோதல் சாவுகருத்தல் உண்ணுக்கு வளருதலென்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### சூதிகாசர்ப்ப விஷம்.

இது வயறுஊளைதல் வாயில் ரத்தங்கக்குதல் மார்படைப்பு கண்ணில நோவுடன்சிவத்தல் சர்வாங்கமும் ஊசியாற் குத்துவது போல் மிகுந்தகுத்தலென்னும் இச்குணங்களை யுண்டாக்கும்முட்டையிட்டசர்ப்பத்திற்குச் சூசிகாசர்ப்பமெனப் பெயராம்.

### கோனச சர்ப்பம்.

இது அதிகவெய்யலினாலும் அலைச்சலினாலும்அடிபட்டபசுக்களின் நாசிக்குள் சனித்துஊத்துவபார்வையுடன் அற்பஉருவமும் நீண்டநாவும் சிரசினலகத்துந் தொனியும்உடையதாய்வெளிபபட்டுத்திரியும் பசுவின்நாசியால்பிறப்பதால் கோனசர்ப்பமெனப் பெயர்பெற்றது.

### வழிச்சர்ப்ப விஷம்.

இது எப்போதும் கடிப்பதற்கேவழுகட்டிக்கொண்டிருக்கும் இப்பாயபுகடித்தால் மரணக்குறிகளெல்லாம சீக்கிரத்தி லுண்டாகும்இந்தவிஷம் மணுமந்த்ர அவிஷதத்தினல் நீங்குமென்றறிக.

### விஷவிருத்தி லட்சணம்.

சர்ப்பக்கடியினல் அற்பவிஷம் ஏறியிருந்தாலும் அது பசி தாகம் தூக்கம் பயம் கோபம் மிகுந்தநகைப்பு அக்கினிதொழிலில் இருக்குதல் சுடுகையானநிலத்தில் பருக்குதல் கீழ்காற்றில்திரிதல் இரட்டைஅலரிப்பூவை முகருதல் சரீரசுட்கம் பேதி அசீரணம் துர்ப்பலம் பித்தவாயுமுதலிய ரோகத்தினல் மெலிதல் யானைமேகம் எலிமுதலியதொனிகளை உற்றுக்கேட்குதல் யென்னும் இவைகளினல் மகாவிஷம் மாறுமென்றறிக.

### சர்ப்பவிஷ பேதகம்.

சகலமான சர்ப்பவிஷத்திற்கும் வாயுவேகம் தேயுவேகம்வருணவேகமென மூன்றுவிதவேகமும் இவற்றுள்உட்பிரிவும் உண்டு

### 1-வது, வாயுவிஷ வேகநிதானம்.

வாயுவைப்பற்றி விஷமேறும்போது எட்டுவிதவேகம் உண்டாகும் அவைபாவன 1-வதுமூர்ச்சையும்மிகுந்தவியர்வையுமுண்டாகும் 2-வது, சரீரம்வெகுப்புதல், 3-வது, கண்சொருவுதல், 4-வது, செவியைஅடைக்குதல், 5-வது, நெஞ்சில் கபங்கட்டுதல், 6

வது, அறிவுமாறுதல், 7-வது, மேல்மூச்சுவாங்குதல், 8-வது, உயிர்நீங்குதலென்பனவாம். ஆனல் இவ்வேகம்பிறக்குமுன் விஷமானது கடிவாயில் 50-மாத்திரைக்காலம் நின்றுபின்புதேகமெங்கும்பரவிச் சிரசிலேறும்.

2-வது. தேயு விஷவேக நிதானம்.

தேயுவென்னும் பித்தத்தைப்பற்றி விஷமேறும்போது 10-விதவேகமுண்டாகும் அவையாவன. 1-வது, முகங்கடுத்துக் கண்கள்சிவக்குதல் 2-வது, ரோமங்களின் முனைபிளந்துசிறுநீர்கருத்திரங்கி முகம்வெளுத்தல். 3-வது வேதனையுடன்சரீரம்நீண்டுசிந்தைமயங்கி வாய்குளருதல். 4-வது சோபம்பிறந்து குடலில் எரிச்சல்கண்டு தேசசுமாறி நாசியால் ஜலம்வடிகுதல். 5-வது தேகமுங்கண்ணும் விடவிடத்து ஆடுதல். 6-வது அங்கம்பதைத்து இளைத்துநாசியில் ஜலம்பெருகிமொழிமாறிப்பல்லைக்கடிக்குதல். 7-வதும்-8வதும் கபங்கட்டிச் சுவாசம்எழும்பி ஊர்த்துவ திஷ்டிபாகப்பார்க்குதல். 9-வது உயிர் அடங்கியிருக்குதல். 10-வது உடலைவிட்டு ஆவிநீங்குதல் என்பனவாம். இவ்வேகம்பிறக்குமுன் விஷமானது கடிவாயில் (௱௫௰) மாத்திரைநின்று பின்பு ஏறும்.

3-வது வருணவிஷவேக நிதானம்.

வருணன் என்னும்சிலேஷ்மத்தைப்பற்றி விஷம்ஏறும்போது பத்துவிதவேகம் உண்டாகும் அவையாவன, 1-வது தேகஞ்சிவந்து ரோமஞ்சிலிர்க்குதல். 2-வது வாயுலர்ந்து தேகங்கருத்து வெதும்புதல். 3-வது தேகத்திற்குட்புறத்தில் உளைக்குதல். 4 - வது கபம் அதிகரித்து மனங்கலங்கி தத்தளிக்குதல். 5-வது தலைநடுக்கலும் அறிவழிதலும் பிறக்குதல். 6-வது கண்மலரவிழித்து மேல்நோக்குதல். 7-வது அவயவம் முறைக்குதல். 8-வது சரீரவியாபாரமடங்குதல். 9-வது சுக்கிலம் நசிக்குதல். 10-வது உயிர்நீங்குதல் என்பனவாம்' இவ்வேகம்பிறப்பதற்குமுன்விஷமானதுகடிவாயில் (௱௫௰) மாத்திரைநின்று பின்பு ஏறும்.

கருநாகவிஷம்.

இது அவுஷதாதிகளால் இறங்கினலும் இரண்டு காதுகளையும் பாதிரியவாதத்தைப்போல் செவிடாக்கும். இந்தவிஷம் நிலப்பனைக்கிழங்கும், உப்பிலாங்கொடிவேரும் அரைத்து சிறுஎலுமிச்சங்காய்ப் பிரமாணம் முகூர்த்தத்திற் கொருதரமாக அ-தரம்விழுங்கில் முறியும்.

4

Digitized By Roja Muthiah Research Library



சிறு நாகம்.

இது தருப்பை அகலமுள்ளபடத்தையும்பருத்தசர்க்கைபொருத்த உடலையும்பெற்று தாழைமலர்க்குள் வாசமாயிருக்கும் இவ்விஷத்திற்கு மகாவிஷசிகிச்சைவேண்டும் இதனை பூநாகம்புல்நாகமென்பர்.

விரியன் பேதம்.

விரியனென்பது. பெருவிரியன், ரத்தவிரியன், செவ்விரியன், நீர்விரியன், பொறிவிரியன், புல்விரியனென ஆறுவிதப்படும் இவைகள் பத்திரகாளியினுடையிலிருந்து பிறந்ததாக சிலர்சொல்லுகிறார்கள்.

பரு விரியன் விஷம்.

இது மயக்கம், தயக்கம், உறக்கம், வெப்பமென்னும் இவைகளையுண்டாக்கும். ஆனால் கடிவாயில் ரத்தமும், வீக்கமும், எரிச்சலும் பிறக்கும்.

ரத்த வீரியன் விஷம்.

இதுவயிற்றில் வியாபித்தால் அவ்வயிற்றில் வலியைஉண்டாக்கிக்கொல்லும். அப்போது கடித்தவாயில் உதிரமும் மேலில்தடிப்பும்பிறக்கும். இதுதவிர மற்ற நான்குவிதவிரியன் விஷத்தினால்நித்திரை மயக்கமும் உண்டாகுமென்றறிக இவைகளுக்கு மகிழம்பருப்பு, வசம்பு, உள்ளி, மிளகு, சுக்கு, கள்ளிப்பால், வேப்பெண்ணெய், இருப்பைப்புண்ணாக்கு, ரசம், வெண்காரம், மருக்காரைப்பழம்பூவன்பழம் இப்பண்ரண்டும் வகைக்கு விராகனிடை 1-ம் வெற்றிலை 14-ம் ஒன்றாய்ப்போட்டரைத்து சீலையில்தடவிக் காயவைத்துக்கொண்டு சிறுநீரில் நனைத்து நாசியிற்பிழிய சகல விரியன்விஷங்களுந் தீரும்.

வழலைச் சர்ப்ப விஷம்

இது கடித்தவிடத்தில் ரத்தமும் வாயில் அனற்றலும் உண்டாக்கும் இதற்கு சிகிச்சை ஏலம் மிளகு வக்கணத்திவேர் இம்மூன்றும் சமனாகக்கூட்டிக் கற்பூரவள்ளிச்சாறு விட்டரைத்து உலர்த்தி அம்மாத்திரையைத் தண்ணீரிலுரைத்துக் கடியுண்டவன்கண்ணில் கலிக்கமிட விஷந்தீரும்.

கருவழலைச் சர்ப்ப விஷம்.

இது சரீரத்திற் காங்கையோடு அதிகவியர்வையும் உள்ளங்கால் உள்ளங்கையில் சிவப்பும் கோழையால் மார்பில் அடைப்பும் பிறக்கும்படிக்குச் செய்யும். இதனால் அனந்தம்வேதனையுமுண்டாக்கும். இது நீலஞ்சோதியும், கடுகுரோகணியும், கோழிமுட்டை வெண்கருவும் சமமாகக்கூட்டி அரைத்துப் பசும்பாலிற் கலந்து உள்ளுக்குக் கொடுக்கத் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

# மூர்க்கன்.

இது கடித்தவிடத்திலும் முதுகிலும் வேதனைப்பிறப்பதுந் தவிர அவ்விஷத்தினால் வாயும் கழுத்தும் முறுக்கிக்கொள்ளுதல், குரல்நெரிதல், தேகம்பதறல், தலைசுழலல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்விஷம் காடியைத்தெளித்து வன்னி இலையையிடித்து அரையாழாக்குச்சாறு பிழிந்து உள்ளுக்குக்கொடுத்துமேலுக்கும் அத்துவாலையிடத் தீரும் இதற்குக் கொம்பேறிமூர்க்கன், சாணாமூர்க்கன் பனையேறி எனப்பெயராம். இதுதன்னால்கடியுண்டவன் சுடுகாட்டில் தகிக்கப்படுகின்றானென்றுஉயர்ந்தமரக்கொம்பிலேறிப்பார்க்குமென்றும்அவ்வளவுதெரிந்தவர்களேஉடனேவைக்கோல் சுமை முதலியவைகளை அச்சுடுகாட்டிலிட்டுப் புகைக்கக் கண்டு அவன் இறந்தானென் றிரங்கிவிடுமென்றும் அதன்பின்பிச்சைசெய்யில்விஷம்திரும்புமென்றும்சொல்லுவதுஉலகவழக்கம்.

## மயக்குச் சர்ப்பம்.

இது கண்ணில் விஷத்தையுடையது. இப்பார்வை சற்றுநேரம்படினும் உடனே அவர்களுக்கு மயக்கமும் கண்களில் சுழற்சியுமுண்டாகும்.

## முறுக்கன் சர்ப்பம்

இதுசரீரமெல்லாம் திருகுக்கள்ளியைப்போல்முறுக்கிக்கொள்ளுதலையும் முறத்தால்தெள்ளுவதுபோல் பதறலையுமுண்டாக்கும்.

## சாரைப்பாம்பு.

இது நீண்டஉடலையும் வேகநடையையும்பெற்று மனிதரை வாலாலடிப்பதும் அன்றிப் பாதமுதல் மார்புவரைக்கும் சுற்றிஇடுப்பையுமொடிக்கும். இதில் வெண்சாரை,கருஞ்சாரைசெஞ்சாரை மஞ்சள்சாரையென நான்குபேதமுண்டு. அவைகளும் இவ்வாறே செய்யும். இவைகளைப் பார்த்த எருமைமாடுகளுக்கு மாலைக்கண் உண்டாகுமென்பர்.

## புடையன்.

இது நீண்டஉருவத்தையும் அழுக்குநிறத்தையும்பெற்று வாலின்முனையால் குத்தி தேகத்தில்புடைகளைவிஸ்தாரமுண்டாக்கும்.

## மண்ணுளிப்பாம்பு.

இது தம்பாக்கு, வெள்ளி, ரத்தம் ஆகிய இவைகளின் நிறத்தைப்பெற்று நீண்ட பயிற்றங்காய்ப் பிரமாண முள்ளதாயிருக்கும் செவியில்நுழையில் அபாயமாம். இவ்விஷத்தினால் பருவகால

Digitized By Roja Muthiah Research Library

தோறும் சிறுசிறுதடிப்பும் நமைச்சலுமுண்டாகும், இதனைச்சிறு பாம்புக்கடியென்பர் இத்தடிப்பு எண்ணெய்விட்டுக்கலந்த கூழை ஏழுநாள் சாப்பிடத்தீறும்.

காலியாங்குட்டி.

இது ஒருசாண் இரண்டுசாண்நீளத்துடன்தேகங்குறைந்திருக் கும்ஆனால் கடிக்கஅறியாது கடிக்கில் பெருஞ்சிகிச்சைவேண்டும்.

கண்குத்திப்பாம்பு.

இது பசியநிறத்துடன் நீண்டஉருவத்தையும்பெற்று விருட்ச ங்களில் வாசம்பண்ணுவதும் நேரிட்டவர்கண்களைக் குத்துவதுமா யிருக்கும் இதுவே பச்சைப்பாம்பாம்.

வெண்ணுந்தைப் பாம்பு.

இது பருத்த செக்கு, பனைமரம், தூண்முதலிய பிரமாணங்க ளையும் உடம்பெல்லாம் வழுவழுப்புமுள்ளதாய் வாலும் தலையும் ஒரேமொத்தமாய் மேலில் வெளுத்தவரிகளைப்பெற்று கோழிஆடு மாடுமுதலியவைகளை விழுங்குவதாயிருக்கும் சிலர் யானையைவிழு ங்குமென்றும் சொல்லுகிறார்கள் இது மலைப்பாம்பு, தாசரிப்பாப் புவெனச்சொல்லப்படும்,

# சில்லரை விஷவகுப்பும்
## அதற்கு சிகிச்சையும்.

### 1 வது ஒணான்.

இது கடிக்கில் அங்கு பிறையைப்போல் காயம் உண்டாகும் அப்போது வீக்கம், நமைச்சல், குத்தல், நோவு, சோருதல், மலத் தில் பலநிறம் என்னும் இக்குணங்களுண்டாகும் இவ்விஷத்திற்கு மூங்கில் குருத்து ரசம் காலாழாக்கில் மிளகு சூர்ணம்பலம் - வ சேர்த்து - டு - நாள் - உ - வேளையும் சாப்பிடத்தீரும். இது பச் சை ஒணானுக்கும் தவளைக்கும் உதவும்.

### 2-வது தவளை.

இது கடிக்கில் அதிக சோம்பலான நித்திரையும் மூர்ச்சை யும் கறுத்தும் பரவுகின்ற சொறியுமுண்டாகும். இவ்விஷம் ஓட் டறை, லவணம், உத்தாமணிவேர், இம்மூன்றையும் சமமாகநிறுத்

Digitized By Roja Muthiah Research Library

துச் சிறுநீரால் அரைத்துக் குழம்பாக வைத்துக்கொண்டு கடிவா யிலும் தேகமுற்றிலும் - அ நாள் லேபனம்பண்ணத் தீரும், லேப னம்யென்பது பூசித்தேய்த்தல்.

### 3வது அடவி ஈ.

இது கடிக்கில் அதிகநித்திரையும் மிகுமூர்ச்சையும் உண் டாகும்.

### 4 வது வீட்டுப்பல்லி.

இது கடிக்கில் நோவு, வியர்வை, வீக்கம், எரிச்சல், மார்பு வேதனை, பொடிச்சிரங்கு. எழும்புதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும், இவ்விஷம், குதிரைச்செவிமரத்தின்வேர், பெருங்கர ந்தைவேர், இவ்விரண்டும் வகைக்குப் பலம் உ - ஆகச்சேர்த்து அதை பாகயிலைச்சாற்றும், பசும்பாலும் சமமாகக் கலந்துவிட்டு அரைத்து தடிப்பாகவைத்துக் கொண்டு கடிவாயில் லேபனம்ப ண்ணி உடம்பெங்கும் துவாலையிடத்தீரும். இவ்விஷம் கொடிய தென்றும் அதிவிரைவில் மகாவிஷ சிகிச்சைகளைச் செய்யவேண்டு மென்றும் இல்லாவிடில் ஒருவருஷத்துக்குள் மரணம் உண்டாகு மென்றும் சிலநூல்களில் சொல்லுகின்றது.

### 5 வது காட்டுமசகம்.

இது கடிக்கில் அவ்விடத்தில் நமைச்சலும், அற்பவீக்கமும், வேதனையும் உண்டாகும். இது அசாத்தியம் ஆயினும் நீலியிலை கலிகத்தாலும் அவ்வேரின் கஷாயத்தாலும் போம். மசகம் என்ப து கொசுவு.

### 6 வது மக்ஷிகா.

இது கடித்தாலும் கொட்டினலும் அவ்விடத்தில் வீக்கம், நமைச்சல். எரிச்சல்முதலியகுணங்கள் உடனே உண்டாகி அட ங்கி பின்பு தடித்து உபத்திரவம் உண்டாவதும் தவிர அத்தடிப் பில் மாறாமல் சிலைத்தண்ணீரும் வடியும். (மக்ஷிகா) யென்பதுகுள விமுதலிய வண்டுகளாம்.

### 7 வது மலைப் பீலிகா.

இது கடிக்கில் அவ்விடத்தில் நீர்துளியைப்போல் தடித்தல், அதிகநோவு, நெருப்பால் சுட்டதுபோல்எரிச்சல், நமைச்சல், தே கத்தில் அழலை என்னும் இக்குணங்கள் உண்டாகும். (பீலிகா) யென்பது எறும்பு.

### 8 வது சிலந்திப்பூச்சியின் பேதம்.

சிலந்திப்பூச்சி (உஅ) பேதப்படும். அதின் விவரம் வாதத் தில் (7) பித்தத்தில் (7) சிலேஷ்மத்தில் (7) சங்கிரணத்தில் (7)

Digitized By Roja Muthiah Research Library

ஆக இருபத்தெட்டாம் அன்றியும் பிரத்தியேகச் சிலந்தி என்பது ஒன்றுண்டு.

## வாதச்சிலந்திப் பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள் வெளுப்பு, சிவப்புநிறத்தையும் ஆசனத்தில் சித்திரங்களான மெல்லிய நூலையும் உள்ளதுகளாயிருக்கும். இவ்விஷங்களால் இருமல்முதலியவாதரோக குணங்களெல்லாம்உண்டாகும்.

## 1-வது, பீதச்சிலந்தி விஷம்.

இது தலைநோவும், அரோசகமும், சுரமும் உண்டாகும்.

## 2-வது, குமுதச்சிலந்தி விஷம்.

இது பட்டயிடத்தில் கொப்பிளங்களெழும்பி அதில்நின்றும் மாறாது சீழ்வடிவதும் எரிச்சல்பிறப்பதுமாக யிருக்கும் இதனால் இரைப்பும்நெஞ்சடைப்புமுண்டாகும்.

## 3 -வது, மூலச்சிலந்தி விஷம்.

இது அதிககொப்பிளங்களையும் அக்கினிக்குணத்தையும்உண்டாக்கும்.

## 4-வது, ரத்தசிலந்தி விஷம்.

இது பட்டயிடத்தில் சிவந்து தடித்து அதைச்சுற்றிலும் சிறியதானகொப்பிளங்களெழும்பி அதில்நின்றும் ஓயாது ரீத்தமும் சீழும் வடிந்துக்கொண்டேயிருக்கும் இதனால் இரைப்பும்பேதியுமுண்டாகும்.

## 5-வது, சித்திரச்சிலந்தி விஷம்.

இது பட்டயிடத்தில் சிவந்தகொப்பிளங்க ளெழும்பி அவைகள் பழுத்து உடைந்தபின்பு அங்கு கறுத்தரணமாகி அதில்நின்றும் நரைபோல் சீழ்வடிதலாயிருக்கும். இதனால்தலையிலும் கில்களிலும் நோவு. சுரம், இரைப்பு, வீக்கமென்னும் யிக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது, சந்தானிகச்சிலந்தி விஷம்.

இது பட்டயிடத்தில் சகிக்கக்கூடாத குத்தலும் விரணமும் உண்டாகும்.

## 7-வது, மேகச்சிலந்தி விஷம்.

இது நீலநிறம் உள்ளது. இவ்விஷத்தினால் அந் நிறக்கொப்பிளங்களெழும்பும்.

ஆக-வாதசிலந்தி-7-ம் முற்றியது.

---

Digitized By Roja Muthiah Research Library

## பித்தச்சிலந்திப் பூச்சிகள்பொதுக்குணம்.

இவைகள் கருமைபொன்மை கலந்த நிறத்துடன்முகத்தில் அனலையும் ஆசனத்தில் தாமரை நூலைப்போல் நூலையும் உள்ளது களாயிருக்கும். இவ்விஷங்களால் முக்கியமாகப் பித்தரோககுணங்கள் உண்டாகும்.

### 1 வது கபிலாசிலந்திவிஷம்

இது கண்களினால் பார்க்கில் தேகமுற்றும் சிவந்ததடிப்பும் வாய்நீர் ஊறலும், மயிர்க்கால்களில் எரிச்சலும், தலைப்பாரமுண்டாகும்.

### 2 வது, அக்கினிமுகச்சிலந்திவிஷம்.

இது அதிக நோவையும் நெருப்பாற்சுட்ட கொப்பிளங்கள் போல்கொப்பிளங்களையும் பிறப்பிக்கும் இதனால் தாகம், எரிச்சல் நடுக்கல், மூர்ச்சை, ரத்தம் வடிதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 3 வது, பீதச்சிலந்திவிஷம்,

இது பட்டயிடத்தில்கட்டைநெருப்பாற்சுட்டதுபோல் இருத்தல், மூர்ச்சை, வாந்தி, சிரோவேதனை, சுரம், அரோசகம், சூலை மலமும் மூத்திரமும் மஞ்சளித்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 4 வது பதுமச்சிலந்திவிஷம்.

இது பட்டயிடத்தில் தாமரைப்பூவைப்போல் வட்டவடிவான கொப்பிளம் உண்டாவதும் பின்பு எழும்புவதும் அதில் மாறுதுஜலம் வடிவதும் நோதலுமாயிருக்கும்.

### 5 வது மூத்திரச் சிலந்திவிஷம்.

இதுபட்டயிடத்தில் கருப்பு சிவப்பு நிறமான கொப்பிளமெழும்பித் துர்க்கந்த விரணம் பிறக்கும் இதனால இருமல், இரைப்பு சுரம், வாந்தி, தாகம், மூர்ச்சை, பிரமை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 6 வது சுவேதச்சிலந்தி விஷம்.

இது பட்டயிடத்தில் விசர்ப்பிரோகக்கொப்பிளம்போல்கொப்பிளமும் எழும்புவதன்றியும் அதில் மாறுது ஜலம் வடிதல், தாகம், மூர்ச்சை, சுரம், நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 7 வது கறுப்புச்சிலந்தி விஷம்.

இதுபட்டயிடத்தில் கறுத்தவீக்கம் உண்டாகி விரணம்பிற

Digitized By Roja Muthiah Research Library

க்கும் அதில் துர்க்கந்தத்துடன் நிரபேதமான ரத்தமும் சீழும்மா றுது வடிந்துக்கொண்டே யிருக்கும்.

ஆக பித்தச்சிலந்தி எ-ம் முற்றியது.

## சிலேஷ்மச்சிலந்திப் பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள் வெண்மை நிறத்தையும் குடலில் நீலநிறத்தையும் ஆசனத்தில் சிவந்தநூலையும் உள்ளதுகளாயிருக்கும் இவ்விஷங்க ளால் சிலேஷ்மரோக குணங்களெல்லாம் உண்டாகும்.

## 1 வது பாண்டுச்சிலந்தி விஷம்.

இது பட்டவிடத்தில் வீக்கத்துடன் கனத்தவிரணம் பிறக் கும் இதனால் சுரமும் ரோமச் சிலிர்ப்பும் சிரோபாரமும் உண் டாகும்.

## 2 வது ரத்தப்பாண்டுச்சிலந்தி விஷம்.

இது பட்டவிடத்தில் வெளுத்துத் தடித்து விரணமாகி ரத் ம்வடியும்.

## 3 வது வண்டேச்சிலந்தி விஷம்.

இது பட்டவிடத்தில் வண்டைப்போல் கறுத்த கொப்பிளம் உண்டாகி அதைச்சுற்றிலும் எரிச்சலைத் தருகின்ற சிறுசிறுகொ ப்பிளம் பிறக்கும் அன்றியும் தேகமெல்லாம் கருத்த மச்சங்களும் எழும்பும்.

## 4 வது பிங்கச்சிலந்தி விஷம்.

இது பட்டவிடத்தில் கொப்பிளம் யெழும்பி அதில் நின்றும் ரத்தம் ஒழுகும் யிதனால், சுரம், நோவு, வீக்கம் அதிக்யெரிச்சல், தாகம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். (பிங்கம்) என்பது மஞ்சள்நிறம்.

## 5 வது, திரிமண்டலச்சிலந்தி விஷம்.

ஷை சிலந்தி பட்டவிடத்தில் கறுதத விரணம் உண்டாகி அதில் நின்றும் ரத்தம்வடியும். யிதனால் அரோசகம், கண்ணெரிச்சல் உடம்பிலும் முகத்திலும் மச்சங்கள் எழும்புதல் என்னும் யிக்கு ணங்கள் உண்டாகும்.

## 6 வது துர்க்கந்தச சிலந்திவிஷம்.

ஷை சிலந்தி பட்டவிடத்தில் பேய்ச்சுரைப் பிஞ்சைப்போல் யெழும்பி கட்டி அதைச்சுற்றிலும்நெருங்கியசிறுசிறுகொப்பிளம்

Digitized By Roja Muthiah Research Library

யெழும்பும். யிதனால் விசர்ப்பிகுணமும், வியர்வையும், துர்க்கந்தமும், யெரிச்சலும் பிறக்கும்.

## 7-வது, சித்திரமண்டலச் சிலந்திவிஷம்,

சித்திரமண்டலியானது பட்டயிடத்தில் விசர்ப்பிபோல் விரணம் உண்டாகி அதைச்சுற்றிக் கொப்பிளங்கள் யெழுப்பும்.

ஆக சிலேஷ்மச்சிலந்தி எ - ம் முற்றியது.

—ㅇ—

## சங்கிரணைச் சிலந்திப்பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள் ஆசனத்தில் பலநிறநூலையும் நெருப்பாற் சுட்டதுபோல் எரிச்சலும், திரிதோஷ குணங்களையும் உள்ளதுகளாயிருக்கும். யிவ்விஷங்கள்சாத்தியமும், கஷ்டசாத்தியமும், அசாத்தியமும்ஆகும்.

## 1-வது, காகச்சிலந்திவிஷம்,

காகச்சிலந்திவிஷம் பட்டயிடத்தில் வெளுத்தும் சிவந்தும், பூனைபுடுக்கன் காயினது, விரையைப்போல் கொப்பிளம்எழும்பும் யிதனால் அதிக வேதனை, விக்கல், யிரைப்பு, யிருந்ததாகம், மூர்ச்சை, நித்திரைபங்கம், சதா மார்புநோவு என்னும் யிக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது அக்கினிபாதச் சிலந்தி.

மேற்படிச் சிலந்தி பட்டயிடத்தில் கால்கள்தோறும் விஷம் உள்ளது அக்கால்கள் தேகத்தில் படில் பட்டயிடமெல்லாம் கொப்பிளங்கள் உண்டாகும்.

## 3-வது, லாஜவர்னச் சிலந்திவிஷம்.

மேற்படிச்சிலந்தி பட்டயிடத்தில் துர்க்கந்த விரணம்பிறந்து அதில் சுப்பலால் குத்துவதுபோல் குத்தலும், ரத்தமும், பெருகும் யிதனால் சீதசுரம், தாகம், மூர்ச்சை, பேதி என்னும் யிக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது, வைதேகிச்சிலந்தி விஷம்.

மேற்படிச் சிலந்தி பட்டயிடத்தில் நெருப்பினால்சுட்டதுபோலிருக்கும் யிதனால் அதிகவேதனையும், சுரமும், மோகமும், மார்புநோவும் உண்டாகும்.



Digitized By Roja Muthiah Research Library

## 5-வது ஜாலமாலினிச்சிலந்திவிஷம்.

மேற்படிச் சிலந்தி பட்டயிடத்தில் விரணம்பிறந்து அதன் மேல் பச்சமும், வீக்கமும், எழும்பும், யிதனால் நோவு, தாகப்பிரமை, யிரைப்பு, தேகம்மரத்தல், மோகம்பேதி யென்னும் யிக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது, மாலாகுணக்சிலந்திவிஷம்.

மேற்படிச் சிலந்திவிஷம் தேகமுழுதும் மச்சங்களைப்போல் கறுத்த தடிப்புகளை யெழுப்பும் யிதனால் உள்ளில் யெரிச்சல், மேலில் குளிர்ச்சி, வயிறுப்பல், மூத்திரக்கிரிச்சரம், மூர்ச்சை, பேதி, சுரம், தலைநோவு. கண்ணோவு, யிரைப்பு, தாகம், வீக்கம் யென்னும் யிக்குணங்கள் உண்டாகும்.

## 7-வது, சுவர்ச்சிலந்தி விஷம்,

மேற்படிச் சிலந்திவிஷம் வர்ணபேதமாயிருக்கும். யிவ்விஷத்தினால் பலநிறக் கொப்பிளம் பிறக்கும்.

ஆக-சங்கிரணச்சிலந்தி 7-ம் முற்றியது.

---

## பிரத்தியேகசிலந்திலட்சணம்.

மேற்படிச்சிலந்தி புணருங்காலத்தில்அச்சுக்கிலத்துளி எத்தனைதெரிக்கின்றதுகளோ அத்தனை கொப்பிளங்கள் விரைவில் உண்டாகும்.

## சிலந்திகடிக்கும் ஸ்தான நிதானம்.

கபிலா சிலந்திமூக்கில் அக்கினிமுகக்சிலந்தி சந்திஸ்தானரம்புகளில் பீதச்சிலந்தி தாடைகளில் பதுமச்சிலந்தி இடதுகண்ணில் தூர்க்கச்சிலந்தி வலதுகண்ணில் மூலவிஷச்சிலந்தி சுவேதச்சிலந்தி மூத்திரச்சிலந்தி கறுப்புச்சிலந்தி ஆகியநான்கும் வலதுபுஜத்தில் பாண்டுச்சிலந்தி காதில் ரத்தபாண்டுச்சிலந்தி இடதுவிலாவில் வண்டுச்சிலந்தி வலதுவிலாவில் பிங்கச்சிலந்தி வயிற்றில்திரிமண்டலச்சிலந்தி முதுகில் பீதச்சிலந்தி கையில் குமுதச்சிலந்தி நாபியில் சித்திரமண்டலச்சிலந்தி இடதுதோளில் சிரசில் ரத்தச்சிலந்தி காதில் சித்திரச்சிலந்தி நெற்றியில் சந்தானிகச்சிலந்தி உதட்டில் மேஜகச்சிலந்தி சிரசில் உள்ளங்கையில் அக்கினிபாதச்சிலந்

தி கண்டத்தில் காக்ச்சிலந்தி மார்பில் லாஜாவர்னச்சிலந்திதனத்தில் வைதேகிச்சிலந்தி தோளில் சாலமாலினிச்சிலந்தி கடைக்கண்ணில் மாலாகுணச்சிலந்தி மார்பின்பள்ளத்தில் சுவர்ச்சிலந்திகாதுக்குப்பின்புறத்தில் கடிக்கும்.

## கடிகால நிதானம்.

சிலந்திப்பூச்சி சுக்கிலபட்ச திதிகளில் சாயங்காலவேளையிற் கடிக்கும் இவ்விஷங்களினால் கடித்தவாயில் வெளுப்பு கறுப்புசிவப்புமஞ்சள் என்னும்நிறமாகவும் இருப்பதன்றியும் அவ்விடத்தில் மிருதுவாகவுயர்ந்து தடித்து அத்தடிப்பைச்சுற்றிலும் சிறுசிறு கொப்பிளம்உண்டாகும் அக் கொப்பிளச்சலம் பட்டயிடமெல்லாம் கொப்பிளிக்கும் இதனால் விசர்ப்பை ரோகத்திலும் சோபைரோகத்திலும் உண்டாகின்ற வருத்தமும் சுரமும் வியர்வையும் உண்டாகும்.

### சிலந்தியின் சப்தவேக விஷநிதானம்.

மேற்கூறிய விஷமானது தேகத்தினிடத்தில் வியாபித்த
1-வது நாளில் அவ்விடத்தில் நிறம் தோற்றாமல் கொஞ்சம் தினவு உண்டாகுதல்.
2-வது நாளில் இயற்கைவர்னத்துடன் தடித்து தினவோடுங்கூடிய சிறியகட்டிகள் எழும்புதல்,
3-வது நாளில் அகல் கவிழ்த்ததுபோல் தடித்துச் சிவந்து அவ்விடத்திலுள்ள ரோமங்கள் சிலிர்ப்பதுமன்றி அந்த மயிர்க்கால்களில் ரத்தங்கசிந்து சுரமுண்டாகுதல்.
4-வது நாளில் அங்கு வீக்கம் யெரிச்சல் யிரைப்பு பிரமை இவை உண்டாகுதல்.
5-வது நாளில் விஷதுர்க்குணங்களெல்லாம் அதிகரிக்குதல்,
6-வது நாளில் அவ்விஷம் மர்மஸ்தானங்களில்வியாபிக்குதல்,
7-வது நாளில் உயிர்க்கு அபாயம்வருகுதல் யென்றறிக.

ஆதலால் அவ்விஷங்களில் உத்தம மத்திம அதமாதமங்களின்புலாபலங்களையறிந்து தகுந்தபடி மந்திர அவுசாதிகளினால்சிகிச்சைசெய்யில் 21-நாளில் சுகுணம்உண்டாகும் ஒருநாள் இரண்டுநாள் கடிவாயில் எரிவுண்டாகி அடங்கிப்பின்பு கொப்பிளமும்யெழும்புமென்பர்.

Digitized By Roja Muthiah Research Library

## சர்வசிலந்திகளின் சாமானியவிஷலட்சணம்.

சிலந்திப்பூச்சிகளின் விஷம்யேறினுல் அவ்விடத்தில் யெழுப்புகின்ற விரணங்களில் சிலது கொப்பிளங்களாயும் சிலது மண்டலாகாரமாயும் சிலது சுவேதநிறமாயும் சிலது சிவந்தநிறமாயும்சிலதுமஞ்சள்நிறமாயும் சிலது நீலநிறமாயும் சிலது மிருதுவாயும்சிலதுகடனமாயும் யிருக்கும் எட்டுக்கால்பூச்சியும் இச் சிலந்திப்பூச்சிகளின் பேதமேயாம்.

## சிலந்தியின் அஷ்டவிதபேதம்,

சிலந்திப்பூச்சிகளின் சுவாசம் பல்லு மலம்மூத்திரம்சுக்கிலும் வாய் வாய்நீர் ஸ்பரிச மென்னும் எட்டுஸ்தானங்களில் நின்றும் விஷங்கள்பிறக்கும் அவைகளில் மனிதர்மீதுபடில் சகலதுர்க்குணங்களும் உண்டாகும்.

### 1-வது, சிலந்தியின் சுவாசம்.

இது சுரத்தையும் மிகுந்ததாகத்தையும் உண்டாக்கும்.

### 2-வது, சிலந்தியின் பல்.

இது அழுந்திய யிடத்தில் பிறக்கின்ற விரணம் நிறபேதமும் கடினமும் ஸ்திரமும் உள்ளதாயிருக்கும் இதனுல் சரீரத்தில்வீக்கம் எரிச்சல் வேதனை வியர்வை தாகமென்னும் இக்குணங்கள்உண்டாகும்.

### 3-வது-சிலந்தியின் மலம்.

இது பட்டயிடத்தில் இலுப்பைப்பழம்போல் வெளுத்த விரணம்பிறந்த அதில் துர்க்கந்தமும் எரிவும் பசபசவென்கிறதினவும் உண்டாகும்,

### 4-வது, சிலந்தியின் மூத்திரம்.

இது பட்டயிடத்தில் நடுவில் கருத்தும் உயர்ந்தும் சுற்றிலும் வாடியும் புட்பம்போல் மலர்ந்தும் யிருக்கின்ற விரணம் பிறக்கும் அதில் துர்க்கந்தமும் பெரிச்சலும் மாருது உண்டாகும்,

### 5-வது, சிலந்தியின் சுக்கிலம்.

இது பட்டயிடத்தில் கடினமானகொப்பிளமும் நோயும்உண்டாகும்.

Digitized By Roja Muthiah Research Library

6-வது, சிலந்தியின்வாய்.

இது பட்டவிடத்தில் முருக்கம்பூவைப்போல் நிறம்உள்ள விரணம்பிறந்து அதில் குத்தலும் ஊரலும்உண்டாகும்.

7-வது, சிலந்தியின் வாய்நீர்.

இது பட்டவிடத்தில் புங்கின்பூவைப்போல் நிறமுள்ள விரணம்பிறக்கும் அவ்விரணத்தின் பக்கங்களில் பூச்சி யூருவதுபோல் பறபறத்தலும் ஊசியால் குத்துவதுபோல் குத்தலும் எரிச்சலும் உண்டாகும்.

8-வது, சிலந்தியின் ஸ்பரிசம்.

இது தேகத்தில்பட்டாலும் இப்பரிசத்தைப்பெற்ற வஸ்திரம் பட்டாலும் முற்கூறிய குணங்களெல்லாம் விரைவில்உண்டாகும்.

சிலந்திப்பூச்சியின் விஷநிதானம் முற்றியது.

---

## சகல சிலந்திவிஷத்திற்கும்

## அவுஷதம்.

மேற்கூறிய சகல சிலந்திவிஷங்களுக்கும் சங்கம்வேர்ப்பட்டை மிளகு இவ்விரண்டையும் வகைக்குப் பலம்-வ - வீதமாக நிறுத்தி மெழுகுபோல அரைத்துப் பசுவினதுநெய்யில்குழைத்து உக-நாள் இரண்டுவேளையும் சாப்பிட்டு இச்சாபத்திய மிருக்கில் தீரும் அல்லது நரிப்பல்லைத் தூளாக்கி அதில் கற்றாழைரசத்தை விட்டு நன்றாக அரைத்துக் கடிவாயிலும்தேகமுற்றிலும்-உக-நாளைக்கு 3-வேளையும் லேபனம்பண்ணத் தீரும் அல்லது அவுரியினது சமூலமும் பலம்-க-ஆகநிறுத்தி அதில் நல்லஜலம் அரைபடிவிட்டு வ- ஆழாக்குக் கிழயாமாகக்காய்ச்சி எ-நாள் இரண்டுவேளையும்சாப்பிடத் தீரும் இவ்வாறே மும்முறை கொடுக்கவேண்டும் அல்லது சிறுசின்னியிலை ரசம் வ-அளவாக யிரண்டுவேளையும் எ-நாள்-3முறை சாப்பிட்டு உப்பில்லாப்பத்தியம் யிருக்கில் விலகும்.

## மீன் விஷம்.

சிலமீன் கடிக்கில் நோகும் எரிச்சலும் உண்டாகும் அன்றியும் நீர்வண்டு சுழல்வண்டு பாசிவண்டு பெரியவண்டு முதலியசில விஷம் உள்ளவைகள் கடிக்கில் அவ்விடத்தில் வீக்கம் நமைச்சல்

Digitized By Roja Muthiah Research Library

நோவு நுரைத்தபேதி சரீரத்தில் தடிப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும் இவ்விஷம் பச்சை நன்னாரிவேரை மேல்தோலும்உள் நரம்போக்கி கொட்டைப்பாக்குப்பிரமாணம் அரைத்து கற்றாழைச்சோற்றில்கலந்து சம-நாள் அந்தி சந்தியிலருந்தத் தீரும் இதற்கு யிச்சாபத்தியம்.

## நர்ட்டுமேரவட்டை.

இதுகடிக்கில் வியர்வைநோவு சரீரம் தடித்தல் வீக்கம் கறுப்பகத்திப்பூ நிறம்போல் பொடிச்சிரங்குகள் யெழும்புதல் பிரமையென்னும் மிக்குணங்கள்உண்டாகும் இவ்விஷம் திரிகடுகு அல்லது காட்டுவாகைப் பஞ்சாங்கம்யென்பது வேர் மேல்பட்டை இலைபூ காய் ஆகிய இவ்வைந்தில் யாதேனும் ஒன்றை வெந்நீரிலரைத்துப் பிழிந்துவடிகட்டி நசியமும் லேபனமும்செய்து உள்ளுக்குக்கொடுக்கில் முறியும் இது மற்றைய அட்டைகட்கும் உதவும்இதற்கு(சுதபதி) யென்றும் பெயர்



## விருச்சிகோற்பத்தி:

சர்ப்பங்கள் செத்தழிந்தயிடத்திலும் சாணம் கோணிப்புட்டைமுதலியவை மக்கினயிடத்திலும் மயானத்தின் சாம்பலிலும்பிறக்கும் இதுகள் முறையேவெளுத்தும் கருத்தும் சிவந்துமிருக்கும் இவற்றின்விஷம் யேறினல் நாவுதடித்தல் தேகமரத்தல்அதிகநோவுநாசியால் ரத்தம்விழுதல் சர்வாங்கத்திலும் வியர்வை மூர்ச்சை வாயுலரல் யென்னும் இக்குணங்கள்உண்டாகும் இது மந்திரவலி அவிஷதவலி தெய்வவலி இம்மூன்றும் ஒத்துக்கொள்ளில் யிறங்கும் விருச்சிகம்யென்பது (தேள்.)

## சாதாரண தேளின் பேதம்.

தேளானது உச்சிலிங்கத்தேள், வாதத்தேள், பித்தத்தேள் சிலேஷ்மத்தேள், யென நான்குவிதப்படும் அன்றியும் நண்டுவர்ய்க்காலி ஒன்றுண்டு.

Digitized By Roja Muthiah Research Library

1-வது, உச்சிலிங்கத்தேள்.

இது பகற்காலத்தில் கொட்டும் யிவ்விஷத்திஞல் அவ்விடத்தில்வீக்கம் நரம்புகளில் மிகுவேதனை ரோமசிலிர்ப்பு அதிக சீதளமென்னும் யிக்குணங்களுண்டாகும் இதுமந்திரத்தால் வசப்படும்.

2-வது, வாதத்தேள்.

இது மார்புநோவு மேல்சுவாசம் எலும்பு நரம்பு கீல் இவைகளில்நோவு தேகங்கருத்தில் கூச்சல் புரளல்முதலிய குணங்களை யுண்டாக்கும்.

3-வது, பித்தத்தேள்,

இது அறிவுநீங்குதல் சுடுகையான மேல்மூச்சு வாயானது காரமாயிருக்குதல் முகத்தில் எண்ணெய்தடவினதுபோல் பளபளப்புமாமிசங்கரைதல் சோஷைபென்னும் யிக்குணங்களை யுண்டாக்கும் அன்றியும் அவ்விடத்தில் வியர்வை கவுட்டியில் நெறிகட்டுதல் எரிச்சல் கடுத்தல் மறுநாள்வரைக்கும் நோதலென்னு மிக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

4-வது. சிலேஷ்மத்தேள்.

இது வாந்தி அரோசகம் மார்பு அதிரல் வாயில் சலம்வடிதல் பீனசம் சரீரமுற்றிலும் வாழைத்தண்டையொத்த சீதளம் வாயினிப்பென்னும் யிக்குணங்களையுண்டாக்கும் இவ்விஷங்கள் கோழிமலம்உலர்ந்ததை நெருப்பிலிட்டுக் கடிவாயில் புகைபிடிக்க யிறங்கும் அல்லது கருநாபியைத் தண்ணீரிலுரைத்துக் கொட்டினவாயில் போடத் தீரும் அல்லது பூனைக்காஞ்சான்சொறிச்சாறும் முருக்கிலைச்சாறும் கொட்டுவாயில் வேதுபிடிக்கக் குளிரும் அல்லது வெண்குன்றிவேரை வெந்நீரிலரைத்துப் பிழிந்துவடிகட்டிப் பஞ்சில்வடிட்டிக்கொண்டு இடதுபக்கங்கொட்டினுல் வலதுநாசியிலும் வலது பக்கங்கொட்டினுல் இடதுநாசியிலும் நசியம்பண்ணத்தீரும்.

## நண்டு வாய்க்காலி.

இதுகொட்டினுல் வியர்வையும் நெறிகட்டுதலும் வீக்கமும் கடுப்பும் குடைச்சலும் யெரிச்சலும் குமுறலும் வாயில் நுரையும் உண்டாகும் இந்தவிஷம் எட்டிவேர்பட்டையை பெரும்நெல்லிக்காய்ப்பிரமாணம் அரைத்து அரையாழாக்குவெந்நீரில் கரைத்து உள்ளுக்குக்கொடுப்பித்துக் கொட்டினவாயில் கத்தரிக்காயைச்சுட்டுக்கட்டினுல் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

# மூஷிகபேதம்.

மூஷிகமென்பது (18) வகைப்படும் அவையாவன லாலஜம் சாளம் புண்டரம் ஹாரிதம் சிகுரம் அசிதம் க்ஷாயதந்தம் குருகம் கோகிலம் கபிலம் கிரிஷ்ணம் அருணம் சபலம் சுவேதம்கபோதம் உந்துரு பலினி ரசாலம் என்பனவாம் அன்றியும்சுகந்தரியென்பது ஒன்றுண்டு யிதுவே மூஞ்சூறு மூஷிகமென்பது எலி.

மூஷிகபேத மென்னும்

## எலிவிஷவகுப்பு.

1-வது, லாலஜ எலி.

மிகுந்த அலைச்சலை உடையதாயிருக்கும் சிதுகடிக்கில் வாந்தி மூர்ச்சை வாய்நீர்ஊரல்பென்னும் யிக்குணங்களுண்டாகும்.

2-வது, சபள எலி.

பலநிறத்தைப்பெற்றிருக்கும் யிதுகடிக்கில் திரிதோஷகுணத்துடன் வாந்தி மிகுந்தமூர்ச்சை அதிகதாகமென்னும் யிக்குணங்களுண்டாகும் சபளம் யென்பது பலநிறமாம்.

3-வது, புண்டர எலி.

பேய்க்கருப்பின் நிறத்தைப்பெற்றிருக்கும் யிதுகடிக்கில் சரீரம் வெளுறலும் அக்கரும்பு வர்னமுள்ளவிரணமும் உண்டாகும்.

4-வது, ஹாரித எலி.

மஞ்சள் நிறத்தைப் பெற்றிருக்கும் இதுகடிக்கில் அக்கினி மந்தமும் கோட்டாவியும் மயிர்க்கூச்செரிதலும் உண்டாகும்.

5-வது, சிறுகுர எலி.

தேகமுற்றிலும் முறைத்தரோமங்களைப்பெற்றிருக்கும் யிது கடிக்கில் தலைநோவு வீக்கம் வாந்திபிரமை தேகமுற்றிலும் மச்சம் யென்னுமிக்குணங்கள் உண்டாகும் சிகுரமென்பது ரோமம்

6-வது, அசித எலி

உதட்டில் கறியநிறத்தைப் பெற்றிருக்கும் யிதுகடிக்கில் சரீரங்கருத்தலும் மூர்ச்சையும் வாந்தியும் மார்புநோவுமுண்டாகும்.

7-வது, காஷாயதந்த எலி.

சிவந்தபற்களைப் பெற்றிருக்கும்யிதுகடிக்கில் சதாஉறக்கமும் மார்புவறளலும் மலபந்தமும் உண்டாகும் இதனைத் தூங்கெலி யென்பர்

Digitized By Roja Muthiah Research Library

8-வது, சூநகஎலி.

மரக்கால்போல் உடலைம்பெற்றிருக்கும் யிது கடிக்கில் சிவந்த மச்சங்களுடன் நோவுண்டாகும் சூநகமென்பது மரக்கால்.

9-வது, கோகில எலி.

குயில்போல் புள்ளிகளைப்பெற்றிருக்கும் யிது கடிக்கில் கிரந்தியும், உக்கிரமான சுரமும், தாகமும் உண்டாகும் கோகிலம் என்பது குயில்.

10-வது, கபில எலி.

கபிலநிறமுள்ள யிதுகடிக்கில் கண்டுகண்டாகவெழும்பி விரணமாகும் யிதனால் சுரம்பிரமை வாந்தியென்னும் இக்குணங்கள் உண்டாகும்.

11-வது, கிருஷ்ண எலி.

கரியநிறத்தைப் பெற்றிருக்கும் யிதுகடிக்கில் தினந்தோறும் ரத்தவாந்தியும், மழைக்காலத்தில அதிகரத்தம் வீழ்தலும், உண்டாகும்.

12-வது, முதல் 17-வரையில் அருணாதி எலிபேதம்.

அருணம், சபலம், கபோதம், சுவேதம், உந்துரு, பலினி, ஆக ஆறுவிதஎலிகளுங் கடிக்கில் திரிதோஷம் அதிகரித்து சந்நிபாதகுணங்கள் அதிகரித்தலுடன் கடித்தயிடத்தில் ரத்தம்வடிதல், கிரந்திகளெழும்புதல், காதின்கீழ் கட்டிகள் பிறக்குதல் என்னு மிக்குணங்களுண்டாகும்.

18-வது, ரசால எலி.

நாமக்கரும்பு நிறமாயிருக்கும் யிதுகடிக்கில் நெஞ்சு மரத்தலும், சொல்லக்கூடாத வேதனையுமுண்டாகும் சகல எலிவிஷங்களும் தேகத்தி லடங்கியிருந்து மழை மேகம் யெழும்புகிறகாலத்தில் அதிகரிக்கும் பெருச்சாளிக்கும் யிவ்விஷம்உண்டு ரசாலம்யென்பது நாமக்கரும்பு.

எலிவகுப்புகள்-18-ம் முற்றியது.

---

## சு சு ந் த ரி.

இதுகடித்க்கில் சரீரமிளைத்தலும், பேதியும், வாய் பேசக்கூடாதமையும் எண்டாகும் இதற்கு (நீலி) குடிநீர் ஆகும்.



Digitized By Roja Muthiah Research Library

### எலிச்சுக்கிலவிஷ நிதானம்-

எலிகள் புணருங்காலத்தில் அச்சுச்கிலம் யார்மீதாவது சிதறு மாகில் அந்தயிடத்தில் கிரந்தி, வீக்கம், மச்சங்களெழும்புதல், பிரமை, அரோசகம், குளிர்காய்ச்சல், கீல்நோவு, நடுக்கல், ரோமச்சிலிர்ப்பு, மூர்ச்சை, சிலேஷ்மாதிக்கம், வாந்தி தாகம் முதலிய குணங்களுண்டாகும்.

### அசாத்திய எலி விஷலட்சணம்.

எந்த எலியினாலாவது பயக்கம், தேகவீக்கம், மாறுருவம், வியர்வை, காதுமந்தம், சுரம், தலைநோவு, வாய்நீர்ஊறல், ரத்தவாந்தியென்னும் இக்குணங்களுண்டாகில் அசாத்தியமே.

### மேற்கூறிய எலிவிஷங்குசிகிச்சை.

இருமல், இரைப்பு, கோழை, வாந்திமுதகுப துர்க்குணங்களைப் பிறப்பிக்கிற எலிவிஷத்திற்கு அழிஞ்வேர்பட்டையை புன்னைக்காய்விதம் வெந்நீரிலரைத்து 8-நாள் இரண்டுவேளையுங்கொடுக்கில் தீரும் குறட்டை-எலி சண்டை-எலி யிவைகளின் விஷம் இலந்தைக்காயளவு பனைவெல்லத்தில் 8 துளி எருக்கம்பால்விட்டு மத்தித்து 7-நாள்சாப்பிடத்தீரும். வயற்றில் றத்தபாய்ச்சலையும் பல்லுகளில் குடைச்சலையும் தருகின்றஎலிவிஷத்திற்குஅவுரிவேன்றநெல்லிக்காயளவு அரையாழாக்குபாகம் பாலிலரைத்துக் கரைத்து 8-நாள் உள்ளுக்குகொடுத்து அந்தயிலையை அரைத்துக் கடிவாயில் தடவிலையிடத்தீரும் இன்னும் நீலக்காக்கணம்வேரைச் சிரிய கொட்டைப்பாக்குபிரமாணமாக அரைத்துக் காலையில்மாத்திரம் 7-நாள் அல்லது 5-நாள் சாப்பிடத்தீரும். இவைகட்கு உப்பில்லாப் பத்தியம்.

---

## சகலஎலிவிஷத்திற்கும் வேறுவகை.

### அதுகள் கடித்ததற்கு ஔஷதம்.

திருவடிவிளக்கன், வாரபுத்திரன், உதிரமண்டலி, அருணன், குலத்தன், மந்திரி, முத்திரையன், உத்திரியன், விரிசெங்கன், விசையன், அலியன், உத்தமன் இவை 12-க்கும், அதின்குணமும் ஔஷதமும், இதினடியிற்காண்க.

Digitized By Roja Muthiah Research Library

## திருவடிவிளக்கன் எலி.

இது கடிக்கில் கண்சிவந்து தேகம் சொரியாகும் கோரைக் கிழங்கு என்னும் முத்தகாசும் இந்துப்பும் தேனில்கொடுக்கவும்.

## மாரபுத்திரன் எலி.

இதுகடித்தால் சரீரத்திற்குள்வெதும்பும் எரிக்கும் தலைசுண்டு வாய் நாற்றமாகும் இதற்கு வாகைப்பட்டையும்அதின்விரையும் தேனில் அரைத்துக்கொடுக்கவும்.

## உதிரமண்டலி எலி.

இதுகடித்தால் சிறுநீர் ரத்தம்போலிறங்கும் கடிவாயில் வட்டம்போலிருக்கும் இதற்கு மஞ்சள் பற்பாடகமும் நெய்யில்அரைத்துக்கொடுக்கவும்.

## அருணன் எலி.

இதுகடிக்கில் உடம்பு கறுக்கும் இருமல் தேகமிளைக்கும் அதற்கு முத்தக்காசும் பற்பாடகமும் தேனிலரைத்துக்கொடுக்கவும்

## குலந்தன் எலி.

இதுகடிக்கில் உடம்பு குளிர்ந்து நடுக்கங்காணும் அதற்கு செஞ்சந்தனம் தேனிலரைத்துககொடுக்கவும்.

## மந்திரி எலி.

இதுகடிக்கில் சொரியாகி தினவாகும் பாவட்டம் இலைமாடப்புறு எச்சம் இவைகளை அரைத்து முகத்திலும் காதிலும் பூசி காக்கணுவேர் கருவேல்பட்டை வில்வவேர் சமன் தேனிலரைத்துக் கொடுக்கவும் தீரும்.

## முத்திரையன் எலி.

இதுகடித்தால் உடம்பு வெண்குட்டமாகும் அதறகு வாகை விரையை சூரணித்து தேனில்கொடுக்கவும்.

## உத்திரியன் எலி.

இதுகடித்தால் உடம்பில் கொப்பிளங்களாகும் அதற்கு தகர விரையை காடியிலரைத்துப்பூசி உள்ளுக்கும்கொடுக்கத் தீரும்.

## விரிசங்கன் எலி.

இதுகடித்தால் காதுகேளாது வீங்கும் உடம்பெரியும் அதற்கு கடுகுரோகணியும் கற்கண்டும் கொடுக்கத்தீரும்.

ROJA MUTHIAH,
47, HOSPITAL ROAD
KOTTAIYUR-623 106

Digitized By Roja Muthiah Research Library

## விசையன் எலி

இதுகடித்தால் வாய்நீருண்டாகும் வீங்கும் உடம்பு முற்றும் சிலிசிலிற்கும் அதற்கு காழிஉளுந்தும் அரிசியும் விளங்காசதையும் அரைத்து நெய்யில்குழைத்து உடம்பிலும் தலையிலும்பூச நீங்கும்.

## அலியன் எலி

இதுகடித்தால் உடம்பு தத்துபோல்காணும் வீங்கும் கண்கறுக்கும் அதற்கு சிறுகீரைவேரை தேனில்குழைத்துக்கொடுக்கவுந்தீரும்.

## உத்தமன் எலி

இதுகடிக்கில் திரேகமெங்கும்கொப்பிளமாகும் அதற்கு பாவட்டம் இலைச்சாறும் புருஎச்சமும் தேனில்மத்தித்துக்கொடுத்து உடம்பிலும்பூச நீங்கும்.

மேற்கண்ட நாமமுடைய எலிகடித்தால் மேற்கண்டவிதமாக நோய்கள்காணுவதால் மேற்கண்டபடி அவிழ்தங்களை 10-15நாள் கொடுக்க நிவர்த்தியாகும் அப்படி வியாதிகளை கவனித்துப் பாராமல் மேகசம்பந்தவியாதிகளென்று மதித்து பலவாறான அவிழ்தங்களைக்கொடுப்பதில் வியாதிகள் நீங்காமல்போவதுடன் அவிழ்தங்கள் புகன்ற முன்னோர்கள்பேரில் பிழைகூறுவது வீணல்லவா.

## எலிகளின் கடிவிஷக்குறிகள்.

### அவைகட்கு நிவர்த்திகள்.

(எலிகடி) பல்லில்வலியும்உளையும்இரத்தமுங்கண்டால் அவுரிவேரை ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் அரைத்து ஆவின்பாலில் ஏழுநாள் கொடுக்கத் தீரும்.

### தேகத்தில் கொப்பிளங்கண்டால்.

பெருமரப்பட்டை யிலை வேர் இம்மூன்றையும் சமனாயிடித்து சூரணித்து ஆவின்வெண்ணெயில் மத்தித்துக் கால்மண்டலங்கொள்ளத்தீரும்.

### சுவாசவாசங்கண்டால்.

சங்கு வெள்ளைக்காக்கட்டான் இவ்விருவகைவேர்களையும் அரைத்து ஆவின்பாலில் கொடுத்துவரத் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

### உடல்பூரித்து இருமல் இளைப்புங்கண்டால்.

கோரைக்கிழங்கைச் சூரணித்துத் திரிகடிபிரமாணம் தேனிற்சாப்பிட்டுவந்தால் தீரும் இறங்கழிஞ்சிவேர்பட்டையை ஒரு புன்னைக்காய்ப்பிரமாணம் அரைத்துவெந்நீரில் ஏழுநாள் காலையில் கொடுக்கத் தீரும்.

### இருமல்கண்டால்.

நாயுருவிசமூலம் அரைத்து ஒருகொட்டை பாக்குபிரமாணம்சாப்பிட்டுவரத் தீரும்.

### இறைப்பு கண்டால்,

மூக்கரைச்சாரணைவேரை ஆவின்பாலில் வேகவைத்து உலர்த்திச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவரத்தீரும்.

### உடல் வெதும்பித் திகைத்தால்.

தூதுளைக்காயும் சீனியும் அரைத்துச் சாப்பிட்டுவரத் தீரும்.

### உடல் வீங்கினுல்.

நீலக்காக்கட்டான்வேரை ஒருகொட்டைப்பாக்குப்பிரமாணம்அரைத்து ஆவின்மோரில்கொடுக்கத் தீரும்அவுரிச்சாற்றை தேகத்திற்பூசவும்.

### கைகால் வராவிட்டால்.

அவுரிவேர் சங்கம்வேர் இவ்விரண்டையும் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

### உடலிற் கழலைபோலும் பலாவித்துபோலும் தடித்தால்.

வெல்லத்தில் ஏழுதுளி வெள்ளெருக்கம்பால்விட்டு ஏழுநாள் கொடுக்கத் தீரும் எருமைச்சாணிப்பாலை மாகாணிப்படிவீதம் மூன்றுநாள் கொடுத்து அந்தச்சாணியைவறுத்துஒத்திடச்செய்யவும் வெள்ளை ஆதளைக்கிழங்கை அரைத்துக் கொட்டைப்பாக்குப்பிரமாணம் வெந்நீரில் ஏழுநாள்கொடுக்கத் தீரும்.

### முகத்தில் கருவங்குபோலும் தேகத்தில் குஷ்டம்போலும் தழுதணையைப்போலும் விழுந்தால்.

ஆடுதீண்டாப்பாளைவேர் சங்கம்வேர் இவ்விரண்டையும் சூரணித்துக் கால்மண்டலங்கொள்ளத் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

கைகால்உளையும் கண்சுருங்கும், உடம்பிற் சுழலைபோற்கட்டித்

தினவெடுக்கும், வெடித்துப்புண்ணுகும,

| | |
|---|---|
| சித்திரமூலம் | குழப்பாலை |
| சிவன்வேம்பு | வெள்ளறுகு |

இன்னுன்னகையும் சூரணித்து திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வரத் தீரும்.

உடல்குளிர்ந்துநடுங்கிகடிவாய்வட்டமாயிருந்தால்.

செஞ்சந்தனம் திப்பிலி இவ்விரண்டையும் பொடித்துத் திரிகடிப்பிரமாணம் தேனிற்கொள்ளத் தீரும்,

கால்கை முடங்களுக்கும்.

அமுக்குராங்கிழங்கைச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணமாகத் தேனில் ஒருமண்டலங்கொள்ளத் தீரும் மேற்படி கிழங்கைஅரைத்துப் பூசிவரத் தீரும் அவுரிசமூலம் இடித்துச் சாறுவாங்கி மாகாணிப்படிவீதம் உள்ளுக்குக்கொடுத்து அந்தச்சாற்றை உடம்பெங்கும்பூசி முறுக்கச்சகல எலிகளின்விஷம் நீங்கும் விழிவேரை அரைத்து ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் வெந்நீரில் மூன்று நாள்கொடுக்கத் தீரும் பேய்ப்பீர்க்கிலைச்சாற்றை மாகாணிப்படிவீதம் (3) நாள் கொடுக்க சகல எலிகளின்விஷந்தீரும் இதுகளுக்கு பத்தியம் உப்பு புளி தள்ளவும்.

---

## நாய்கடிக்கு,

நாராக்கரந்தை: நன்னரி, சென்னயுருவி இந்த (3) இலையும் எள்ளும்புகையூரலும் சேர்த்தரைத்து கடிவாயிற்பூசவும். மேலும் கோவையிலையை அரைத்துப்பூசவும். சுண்ணடையிலையையும் உப்பும் அரைத்துப்பூசினலும் தீரும்.

---

நாய், நரி. சிறுபுலி, குரங்கு.

பூனை. குதிரை, மிதளை, வேங்கை, கடிவுஷத்துக்கு

அவுரிவேரை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் அரைத்து ஆவின்பாலிற் கலக்கி மூன்றுநாள் கொடுத்து அந்தவேரைஅரை

Digitized By Roja Muthiah Research Library

த்து கடிவாயிற் பூசத்தீரும். விழியிலைச்சாற்றை மூன்றுநாள்கொடுக்கத்தீரும். கொல்லங்கோவைக்கிழங்கை ஒருகொட்டைப் பாக்குப்பிரமாணம் அரைத்து வெந்நீரில் (3) நாள் கொடுத்து அதை அரைத்துக் கடிவாயிற் பூசவும்.

மனிதர், பேய்நாய், பேய்நரி.
பெருச்சாளி, எலிகடிளிகள், விஷத்துக்கு.

இறங்கழிஞ்சிப்பட்டையை ஒரு கொட்டைப்பாக்கு பிரமாணம் வெந்நீரிற் கலக்கி 3-நாள் காலையில் கொடுக்கத்தீரும் மேல்படி மருந்தினல் வாந்தி பிராந்திகண்டால், சுக்கு, மிளகு, வசம்புக்கரி இந்த 3-வகையொன்றுக்குவிராகனிடை 1-முருங்கையிர்க்கு ஒருபிடி இவைகளைச் சிதைத்து அரைப்படி தண்ணீரிற் போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்துக்கொடுக்க வாந்திநிற்கும்.

# பேய்நாய்.

இது கடித்தால் அவ்விடத்தில் விரணம் பிறக்கும் இதனல் தாதுநஷ்டம் வாய்நீரூரல் கண்மயக்கம் காதுமந்தம் தேஜசுநீங்குதல் தாள்பிடிப்பு சிரோபாரம் தூங்கும்போது அவ்விரணத்தில் நின்றும் கறுத்தரத்தம்வடிதல் மார்புநோய் சுரம் தேகம் மரத்தல் தாகம் மூர்ச்சையென்னு மிக்குணங்கள் உண்டாகும் இதற்குக்கற்றாழைமடலும் லவணமும் சமமாகயிடித்துக் கடிவாயில் 3-தினம் கட்டுவதுந்தவிர பேயத்திவேர், ஆலம்பட்டை, வேப்பிலை 3-ம், வகை க-க்கு பலம்-ல. ஆக கூட்டியிடித்து ஒருபடி கழுநீர்போட்டுக் கொதிப்பித்துக் குழம்பாயிரக்கி ஏழுநாள் மேலில்பூசி மருந்தால் விரோசனமும் செய்விக்கத் தீரும்.

## சகல மிருகஜெந்துக்களின் விஷநிதானம்.

குதிரை, புலி, கரடி, காட்டுப்பன்றி, கோணுய், நரி, பூனை, மாயப்பூனை, குரங்கு, கீரி, முதலை, முதலிய செந்துக்கள் கடிக்கில் அந்தக் கோரைத்தந்தங்களில் இருக்கின்ற விஷத்தினல்தினவு உருவபேதம் நோவு நித்திரையில் வியர்வையொழுகுதல்சுரம்பிரமை தாகம் வீக்கம் கிரந்தி மயக்கம் கடிவாயில் மச்சமும் அதன்மேல் கொப்பிளமும் எழும்பிப்புடையும் அநேகரோகமும் பிறக்குதல் என்னு மிக்குணங்கள் உண்டாகும். இவைகட்கு உடனேரசகந்தக

Digitized By Roja Muthiah Research Library

பாஷாணவருக்கம் சேர்ந்த விஷமருந்துகளைக் கடிவாயில்வைத்துக் கட்டி அந்தயிடத்தில்ரோமங்கள் முளைக்கவொட்டாத விரணஞ் செய்வித்து அதைக் காலாதீதத்தில் ஆற்றுவதுந்தவிர அந்த அவுஷதங்களை உள்ளுக்குக் கொடுப்பிக்கில் ஷை விஷம் சாத்தியமாம் இவ்வளவு பெரிய சிகிச்சைகளைச் செய்வானேனென்றால் அவ்விஷங்கள் அற்பமேனும் தேகத்தில்தங்கி ஊருமாயின் பின்புசகல துற்குணங்களும் பிறக்கும் ஆதலால்செய்யவேண்டும். இதுதப்பிக் காலாதீதச்சிகிச்சை செய்கில் விஷமும்முதிர்ந்து அந்தந்தஜெந்துக்களின் நடைகுரல் பார்வை சேஷ்டை முதலிய குணங்களும் பிறக்கும் அப்போது அசாத்தியமாம்.

## தந்தநகவிஷ நிதானம்.

பசுமுதலிய மாடுகளுக்கும் மனிதர்களுக்கும் பல் நகம் இவைகளில் விஷம் உண்டு அவைகள்பட்டு விரணம்பிறந்தால் அதில் வீக்கத்துடன் ரத்தம் வடியும். இதனால் சுரம் உண்டாகும் இது அசாத்தியமாம்,

## சகல விஷஉபத்திரவ நிதானம்.

சகல விஷங்களுக்கும் சுரம், இருமல், இரைப்பு, வாந்தி, விக்கல், மயக்கம், தாகம், சரீரத்தில்கடினத்துவம், வயிறுப்பிசம், அடிவயிறும் தலையும் நோதல், வீக்கம், துர்க்கந்த ரத்தம், வடிகின்ற விரணம் வாதாதிக்கம் யென்னும் (யச) துர்க்குணங்கள்பிறக்கும் இதுவே விஷ உபத்திரவமாம். இக்குணங்கள் உண்டாவதற்குமுன்னமே தகுந்தசிகிச்சைகளைச் செய்யில் சாத்தியமாம் நீடிக்கில் கஷ்டசாத்தியமாம்.

## தூஷிவிஷ நிதானம்.

முற்கூறிய யெவ்வகை விஷமானது தானே க்ஷீணகதியானாலும் விஷஹரமான சிகிச்சையால் அதமானாலும் வெய்யில் காட்டுத்தீ காற்று முதலியவைகளினால் சோஷித்தாலும் சுபாவமாகவே சோஷித்தாலும் அவ்வுடற்குள் அழுகப்பட்டிருந்தாலும் அவ்விஷங்களுக்குத் தூஷிவிஷம் யெனப்பெயர் இவைகள் அற்பமாயிருந்தாலும் மனிதர்தேகத்தில் பாய்ந்தவுடனே சிகிச்சை செய்யவேயிருந்து பின்பு கபத்தைப்பற்றி ஏறும் இதனால்பல நிறமானமலமண்டும் செய்யாவிடில் ஒருவருஷபரியந்தம் உடம்பினுள் அடங்கி

Digitized By Roja Muthiah Research Library

வாயினால் ரத்தம் வீழ்தல், தாகம், அரோசதகம், வாந்தி, மயக்கம் ஈனத்தொனி சோருதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும் அதர்க்குப்பின்பு அது ரகசிய ஸ்தானத்தைப்பற்றி ஏறும் இதனால் சிலேஷ்ம வாதரோகங்கள்பிறக்கும் அதற்குப்பின் அதுபக்குவா சய ஸ்தானத்தைப் பற்றிக் கலக்கும். அப்போது வாதரோகருண ங்களெல்லாம் பிறப்பது மன்றித் தலைமயிர்கள் உதிரும் அதற்குப் பின் அது சப்ததாதுக்களையும் பற்றிப் பரவும் அப்போது அன ந்த விகாரங்களுண்டாகும். ஆதலால், அற்பவிஷத்திற்கும் மகா விஷ சிகிச்சைகளைச் செய்யவேண்டும். தூஷியென்பதுஅற்பமாம்.

## சில சாஸ்திரக் கேழ்வி

கறட்டு ஓணன், தேள், நண்டுவாய்க்காலி, பூரம்,சிலந்தி, புலி முகப்பூச்சி, செய்யான், பொறிவண்டு, இவைகள் விரியன் பென், னும் பாம்பினது முதுகுவெடிக்க அதன்வழியாகப்பிறக்குமென்று சிலசாஸ்திரம் கூறுகின்றது.

## சீ த ம ண் ட லி

இது கடித்தால் குடல் குளிர்தலும் அரட்டலும் மிகுந்தவிய ர்வை பெருகி ஓடுதலும் உண்டாகும். இதற்கு ரசகந்தமாதி உண் டைஆகும்.

### ர த் த ம ண் ட லி.

இது கடித்தால் மயிர்க்கால்கள் தோறும் ரத்தம் ஒழுகும் இ தற்கு யானைவணங்கி இலையைமாத்திரம் பெரிய எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரைத்து ஆழாக்கு நல்லஜலத்தில் கரைத்துக் கொடு க்கில் நலமாம்.

# பூ ர ம்.

இது கடிக்கில் அது ஊறுவதுபோல் தினவும் அவ்வுருவத் தைப்போல தடிப்பும் உண்டாகும் இதற்கு, குப்பைமேனிச் சா ற்றைஉள்ளுக்குக்கொடுத்து பத்தியமிருக்கவும்.

### செ ய் யா ன்.

இது கடித்தால் அவ்விடத்தில் வீக்கமும் தேளைப்போல்மறு நாள்வரைக்கும் கடுப்பும் உண்டாகும் யிதற்குத் தேள்விஷச்சிகிச் சை உதவும்.



Digitized By Roja Muthiah Research Library

## செஞ்சேரா

இது கடிக்கில் மேலில் சிவந்த புள்ளிகளான தடிப்புகள் உண்டாகும் இவ்விஷம் உத்தாமணியிலை ரசத்தில் சுண்ணங்குழைத்துப் பூசத்தீரும்.

## கருஞ்சேரா

இது கடித்தால் தேகத்தில் கறுப்புக் கறுப்பான தடிப்புகள் உண்டாகும் இதற்கும் மேற்கூறிய சிகிச்சைகள் ஆகும்.

## அறுப்புள்ளி வண்டு

இதுகடித்தால் சர்வாங்கத்திலும் சிலநாட்சென்றபின்புவட்டம் வட்டமான தடிப்புகள் உண்டாகும்.

### செவ்வட்டை.

இது கடித்தால் அவ்விடத்தில் சிவந்து தடித்து மரத்திருக்கும்.

## அரவணை

இது கடித்தால் சரீரமுழுதும் நடுக்கல், வாயால் நுரைவீழ்தல், நாவுதடித்தல், என்னும் யிக்குணங்கள் உண்டாகும் யிதற்கு ஒணான் விஷத்திற்குச்சொல்லிய சிகிச்சைகள் உதவும்.

### சரகுண்ணி.

இது கடித்தால் வீக்கம் பெழும்பும் காட்டுண்ணிக்கி யிக்குணத்துடன் கடுப்பும் உண்டாயிருக்கும் யிதற்குக் குப்பை மேனிரசம் ஆகும்.

# எலிபேதம்.

கத்தரிமணியன், செம்மூக்கன், வரளி, குறட்டை, கருங்காலன், தலையன், விடவெலி, செற்றலைமுட்டி, செவ்வெலி, வீங்கெலி, தூங்கெலி, உலைப்பெலி; புடையெலி, இரைப்பெலி, செங்கண்ணன், புள்ளக்காடன், குறுக்காள்ன், நச்செலி ஆக 18 வகையாம்.

சில்லரை விஷ பேதம முற்றியது.



Digitized By Roja Muthiah Research Library

இதற்கு முந்திய மூலிகைமர்மம். உன்னும் சாஸ்திரத்தில் ரசபாஷாணதிவர்க்கம் ஒன்றேனுமின்றி புத்தகம் முதலிலிருந்து கடசிமட்டில் மூலிகைப் பிரயோகமே அடங்கியது மூலிகை பெடுக்கும் மூலமந்திர சபாநிவர்த்தியுடன் 640 முறைகள் அடங்கிய நூல் விலை அணா 8 க்குக்கிடைக்கும்.

## சகல விஷகடிகட்கும்.

# அவுஷதவகுப்பு.

## பரஞ்சோதிக்குழம்பு.

சர்வவிஷத்திற்கு,

| | |
|---|---|
| ஊமத்தன்பருப்பு | இரதம் |
| மகிழம்பருப்பு | கெந்தகம் |
| அழிஞ்சில்பருப்பு | வெண்காரம் |
| தில்லைப்பருப்பு | குக்கில் |
| வெண்குன்றிப்பருப்பு | நாவிக்கிழங்கு |
| வாளப்பருப்பு | நிருவிஷம் |
| மனோசிலை | பொன்மெழுகு |
| அரிதாரம் | பெருங்காயம் |
| கெவுரி | சுக்கு |
| வெள்ளை | மிளகு |
| இலிங்கம் | திப்பிலி |
| நவச்சாரம் | வெள்ளைப்பூண்டு |
| சீனக்காரம் | வெந்தயம் |
| நீலத்துருசு | |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 2 ஆகச்சுத்திசெய்து எலுமிச்சம்பழச்சாற்றால் ஐந்துநாள் வன்மையில் கைவிடாமல் அறைத்து மேதிக் கொம்புச்சிமிளி லடைத்துக்கொண்டு பணவிடைவெற்றிலையிற் றடவிக்கொடுக்க அஷ்டநாகம், விரியன், மண்டலி, செய்யான், செவ்வட்டைக்கடி தேள், நட்டுவாக்காலி, எலி மூஞ்சூறு, பூனை, அரணை, முதலை, யானை, பேய், நரி, பேய்நாய்

Digitized By Roja Muthiah Research Library

இவைகளின் கடிவிஷமும் மற்ற ஊர்வன விஷஜெந்துக்களின் கடி விஷமும் நீர்வாழும் ஜீவ ஜெந்துக்களின் கடிவிஷங்களும் தீரும் இதற்குப் பத்தியம் ஆவின்பால் அன்னம் சாப்பிடவும்.

### மகாசிந்தாமணிக் குழம்பு.

| | |
|---|---|
| இரதம் | தாரம் |
| கெந்தி | நிருவிஷம் |
| வெள்ளைப்பாஷாணம் | சன்னிநாயகம் |
| நாவிக்கிழங்கு | சுக்கு |
| இலிங்கம் | மிளகு |
| துத்தம் | கடுக்காய் |
| துருசு | வாளப்பருப்பு |

இவைகள் வகை க-இ விராகனிடை க.

| | |
|---|---|
| குப்பைமேனி | ஊமத்தை |
| தைவேளை | அவுரி |
| பேய்பீர்க்கு | வேலிப்பருத்தி |

இவைகளின் இலைச்சாறுவகை க-இ அரைக்கால்படி பேய்கு ம்மட்டி பழச்சாறுபடி அரைக்கால், காஞ்சிரம்பழச்சாறுபடி ஒன் று, இவைகளை விட்டு ஷெ சரக்குகளைத் தனித்தனியே அரை த்து ஒருசட்டியிற்போட்டு கொஞ்சம் வேப்பெண்ணைவிட்டு மெ ழுகுபதமாய்க் கிண்டி சிமிளி லடைத்துக்கொண்டு அஷ்டநாகம் முதலாயுள்ள சர்வவிஷத்திற்கும் ஒருகுன்றியிடை அல்லது அரை க்குன்றியிடை கொடுக்கத்தீரும் பத்தியம் பால் அன்னம்.

## சஞ்சீவிக்குழம்பு.

| | |
|---|---|
| துருசு | அரிதாரம் |
| இரதம் | நாவிக்கிழக்கு |
| காயம் | வெள்ளைப்பாஷாணம் |
| ஜாதிலிங்கம் | கெந்தம் |
| வெண்காரம் | வேப்பம்பருப்பு |
| வாளப்பருப்பு | |

இவைகளை வெள்ளெருக்கம் பாலில் ஒருஜாமமும் வேப்பெ ண்ணெயில் ஒருஜாமமும் அரைத்து சிமிளிலடைத்துக் கொண்டு பயறளவு வெற்றிலையிற் கொடுக்க சருவவிஷமும் விஷவேகத்தால் பற்கிட்டியிருந்தால் பணவிடைவெந்நீரில் கலக்கிப் புகட்ட நீங்கு ம். பத்தியம் பாலும் அன்னமும் முருங்கையிலையை உப்பில்லா மல் அவித்து மிளகுபொடி தூவிக் கொடுக்கவும்.

Digitized By Roja Muthiah Research Library

## சஞ்சீவகரணித்தயிலம்,

| | |
|---|---|
| காஞ்சிரம்பழம் | கொடிவேலிவேர் |
| பேய்க்கும்மட்டிப்பழம் | காஞ்சிரைவேர் |
| இவை வகை க-க்கு பழம் ாரு. | அமுக்குராக்கிழங்கு |
| வெண்குன்றிப்பருப்பு | கெருடக்கிழங்கு |
| நீர்க்கடம்பருப்பு | நாவிக்கிழங்கு |
| நீர்வெட்டிமுத்து | முத்தினவேம்படை |
| இவை வகை க-க்கு படி உ. | மாவிலிங்கப்பட்டை |
| நேர்வாளக்கொட்டை | பெருமரத்துப்பட்டை |
| வேப்பங்கொட்டை | கருஞ்சூரைப்பட்டை |
| இவை வகை க-க்கு படி ரு. | வேலிப்பருத்திவேர் |
| | இவைவகைக-க்கு-பலம்உம. |

இதுகளை யெல்லாம் இடித்து வில்லைவில்லையாய்த் தட்டி காய வைத்து பாண்டத்திலிட்டு பூப்புடத் தயிலம்வாங்கி அந்தத்தயிலத்துக்குச் சமன் வேப்பெண்ணைக் கலந்து அதில், இரதம்விராகனிடை உ., பச்சைப்பாம்பு க, மூஞ்சூறு க, யிம்மூன்றையுங்கூடப்போட்டுக் கலசவாயைமூடி ஒருமண்டலம் எருக்குப்பையில் புதைத்தெடுத்து வெற்றிலையிலாவது வெந்நீரிலாவது யிரண்டுதுளி கொடுக்க அஷ்டநாகம், விரியன். வழலை முதலான சர்வவிஷங்களும் யிறங்கும், உயிர் அடங்கியிருந்தால் உச்சியைக்கீறி அதில் தயிலத்தைத்தேய்த்து நாசி காதில் விட்டு நாவிலுந்தேய்க்க உயிர் மீளும் பத்தியம் பால் அன்னம்.

## இராமாயணத்தயிலம,

| | |
|---|---|
| யிறங்களிஞ்சிவித்து | கழற்சிவித்து |
| புங்குவித்து | கார்கோலவித்து |
| தான்றிவித்து | கடுக்காய் |
| புன்னைவித்து | |

இவைகள் வகையொன்றுக்கு படி. க இவைகளை வெள்ளாட்டு நீரிலும் யிறுபிள்ளைகள் நீரிலும் வகையொன்றுக்கு உம-நாளூரவைத்து உலர்த்தி குழித்தயிலம் வடித்து பணவிடை வெற்றிலையிற் றடவிக் கொடுத்துக் கடிவாயிலும் பூச அஷ்டநாகங்கள் எலி விரியன், புடையன் தேள், நங்டுவாய்க்காலி, மூறுக்கரவு, அரணை முதலிய சில்லரை விஷங்கள் தீரும் விஷக்கடியால் நேரிடும்குஷ்டமுதலிய ரோகங்கள் தீரும் பத்தியம் வெள்ளாட்டுப்பால் அன்னம்

Digitized By Roja Muthiah Research Library

## சஞ்சீவினைமை.

திருக்கள்ளியின் மேல்பொருக்கு யிரண்டுபங்கும்மிலுப்பைப் பிண்ணாக்கு ஒருபங்கும் ஒன்றாய்க்கலந்து எருபாண்டத்திலடைத்துவெள்ளாட்டு ஒருக்கொட்டிக் குழித்தயிலம் வடித்துக்கொள்ளவும். புதியகாஞ்சிரை வித்தையும் அதுபோல் தயிலம் வடித்துக்கொள்ளவும். யிந்த யிரண்டுவகை தயிலத்தையும் ஓர் நிறையாய் ஒன்றாய்க்கலந்து ஒரு பழய சட்டியில்விட்டு காஞ்சிரைவேர் தடியால் கைவிடாமல் மையாகும்வரையில் கடைந்து செப்புச்சிமிளிலடைத்துக்கொண்டு ஒருகுன்றுமணியிடை வெற்றிலைச்சாற்றிலாவது வெந்நீரிலாவது கலந்துகொடுக்க அஷ்டநாகம் முதலாயுள்ள சகலவிஷமும் தீரும் உயிர் அடக்கமா யிருந்தால் நீர்த்தாரை மூலமாய் மேல்படிமையைப் பிரயோகிக்கத் தூங்கினவன்போல் விழிப்பன்.

### பரஞ்சோதிமை.

தாய்-நசல்கள், இருபது கொண்டுவந்து பீங்கானிற்போட்டு கால்விராகனிடை வெங்காரத்தைப் பொரித்துப் பொடித்துவி வெய்யலில்வைக்கத் தயிலமாகும் அந்தத்தயிலம் களஞ்சி ௩.

| | |
|---|---|
| சுக்கு | சூதம் |
| பெருங்காயம் | யிந்துப்பு |
| கெந்தி | வேப்பன்பருப்பு |

இவைகள் வகையொன்றுக்கு களஞ்சி க யிதுகளையொன்றாய்ச் சேர்த்தரைத்து மைப்பதத்தில் சிமிளி லடைத்துக்கொண்டு பணவிடை வெற்றிலையிற் சேர்த்துக்கொடுக்க அஷ்டநாக முதலாயுள்ள சர்வ விஷமுந்தீரும். விஷம் சிரசிலேரி மயக்கமாகிவிட்டால் எள் பிரமாணம் மேற்படிமையைக் கண்ணில் கலிக்கமும்நாசியில் நசியமுமிட மயக்கம் தெளிந்து விஷமிறங்கிப்போம் வெறிநாய், எலிகடி விஷமும்தீரும். மேற்படி வெற்றிலையில் பெண்களுக்குக்கொடுக்க மலடுநீங்கும் குஷ்டம் பதினெட்டு குன்மவலி வயிற்றுவலி நீங்கும்.

### சூரன்மை.

| | |
|---|---|
| முஞ்சூறுவயிற்றல் | கெந்தகம் |
| சூதம் | வெள்ளைப்பாஷாணம் |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 2-பொடித்து வைத்துத் தைத்து ஒரு கலசத்திற்போட்டு அதுமுழுகும்படி

Digitized By Roja Muthiah Research Library

வேப்பெண்ணெவிட்டு கலசவாயைமூடிசீலைமண்செய்து எருமைத் தொழுவில் ஒருமண்டலம்புதைத்தெடுத்துக் கல்வத்திட்டு மயனமாய் அரைத்து சிமிளிலடைத்துக்கொண்டு நல்லரவு விஷத்திற்கு ஒருசுண்டைக்காய்ப்பிரமாணமும் விரியன்விஷத்திற்கு இரண்டு சுண்டைக்காம்ப்பிரமாணமும் மற்றசில்றனைவிஷத்திற்கு ஒருமிளகுபிரமாணமும் வெற்றிலையில் தடவிக்கொடுக்கத் தீரும்.

பரஞ்சோதி மாத்திரை.

| | |
|---|---|
| திப்பிலி | சூதம் |
| மிளகு | கெந்தகம் |
| இந்துப்பு | இலுப்பைப்பருப்பு |
| பெருங்காயம் | செண்பகவேர் |
| பழுபாகற்கிழங்கு | இருவாட்சிவேர் |
| கொல்லங்கோவைக்கிழங்கு | முருங்கைவேர் |
| நாவிக்கிழங்கு | காஞ்சிரைவேர் |
| ஆடுதீண்டாப்பாளைவேர் | வாளப்பருப்பு |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை-1 இதுகளையெல்லாம்பொடித்து மூஞ்சூறு வயிற்றுள்வைத்துதைத்துஒரு கலசத்திற்போட்டு அதின் வாயைமூடி பூமியில்புதைத்து மண்டலஞ்சென்றெடுத்து பேய்ப்பீர்க்கிலைச்சாற்றால் அரைத்துப் பணவிடைவீதம் மாத்திரைசெய்து ஒருமாத்திரையை வெற்றிலையில்வைத்துக் கொடுக்க சர்வவிஷமும்தீரும் விஷம்தலைக்கொண்டிருந்தால் ஒரு மாத்திரையை வெற்றிலைச்சாற்றில் மத்தித்துக் கண்ணில் கலிக்கமும் நாசியில் நசியமும்செய்து நீர்த்தாரையில் நாளத்தின்மூலம் பிரயோகிக்க விஷமிறங்கும்.

## சூடாமணிமாத்திரை

| | |
|---|---|
| தொட்டிப்பாஷாணம் | வாலுளுவையரிசி |
| வெள்ளைப்பாஷாணம் | வாளப்பருப்பு |
| கௌரிபாஷாணம் | இந்துப்பு |
| அரிதாரம் | கார்கோலரிசி |
| சூதம் | முசுறுமுட்டை |
| சேங்கோட்டைப்பருப்பு | வெண்காரம் |

Digitized By Roja Muthiah Research Library

| | |
|---|---|
| காக்கைகொல்லிவித்து | நவச்சாரம் |
| துருசு | கல்லுப்பு |
| பெருங்காயம் | வெடியுப்பு |
| விளாவரிசி | பேய்க்காளான் |
| கருநாவிக்கிழங்கு | எட்டிவித்து |
| மூஞ்சூரின்சதை | |

இவ்வகை பொன்றுக்கு விராகனிடை 1 இதுகளை வெள்ளெருக்கம் பாலால் 3-நாள் வரையில் கைவிடாமல் அரைத்துகுன்றிபோல் மாத்திரைசெய்து ஒரு மாத்திரையை வெற்றிலைச் சாற்றில்கொடுக்க சகல விஷமுந்தீரும் உயிர்அடங்கியிருந்தால்உச்சியிலும், தோளிலும், தொடையிலும் கீறி மேற்படி மாத்திரையை சிறுநீரிலுரைத்துச் சூடுபிறக்கத் தேய்த்துவிட்டுஉயிர்திரும்பும்.

## கடிவாயிற்கட்டுமாத்திரை.

| | |
|---|---|
| இரதம் | நாவிக்கிழங்கு |
| வாளப்பருப்பு | நெய்க்கொண்டான்பழம் |
| கௌரிபாஷாணம் | |

இவைகளை பேர் நிறையாகயெடுத்து எலுமிச்சம் பழச்சாற்றால் மயனமாயாட்டி மாத்திரை செய்துக்கொண்டு எந்த பாம்பு தீண்டினாலும் கடிவாயில் வைத்துக்கட்ட விஷத்தைக் கீழ்நோக்கி யிழுத்துக்கொள்ளும் மேற்செல்லவிடாது.

## வேறு.

| | |
|---|---|
| வெணகாரம் | அரிதாரம் |
| இரதம் | பச்சைப்பாம்புகண்டம் |

இவைகளை வெற்றிலைச்சாற்றால் ஆட்டி மாத்திரை செய்துக்கொண்டு கடிவாயில் வைத்துக்கட்ட விஷம் கீழ்நோக்கும்,

## அட்க்கம்யெழுப்ப அஞ்சனம்.

| | |
|---|---|
| சூதம் | துத்தம் |
| வாளப்பருப்பு | வெண்காரம் |
| அரிதாரம் | லசிரெங்கு |
| நீலத்துருசு | |

இவைகள் வகைபொன்றுக்கு விராகனிடை 1-இவைகளை பேய்ப்பீர்க்கிலைச்சாற்றால் அரைத்து மாத்திரைகளாகச் செய்துக்கொண்டு பணவிடை வெற்றிலைச் சாற்றிலாவது பேய்ப்பீர்க்கிச்லை

Digitized By Roja Muthiah Research Library

சாற்றிலாவது உரைத்து வழியில்திட்ட அஷ்டநாக முதலாயுள்ள விஷஜெந்துக்களின் கடியால் அடங்கின உயிர்மீளும்.

கெருட அஞ்சனம்.

| | |
|---|---|
| இந்துப்பு | பெருங்காயம் |
| இரதம் | அரிதாரம் |

இவைகளையோர் நிறையாயெடுத்து பேய்ப்பீர்க்கிலைச் சாற்றாலாட்டி மாத்திரைசெய்து பணவிடை வெற்றிலைச்சாற்றில் மத்தித்துக் கண்ணிலிட அஷ்டநாக முதலாயுள்ள சர்வ விஷமுந்தீரும்,

அடக்கம்யெழும் ஆக்கிராணம்.

தாம்பூலப்பூச்சி, இரதம், துருசு, வகையொன்றுக்கு விராகனிடை 1-இவைகளையொன்றாய்ப்பொடித்து சுந்தரிவயிற்றுக்குள்வைத்துமைத்து புகையடிக்கிற யிடத்தில் கட்டிவைத்துக் காய்ந்தபின் பொடித்து அதை நாசியில் ஊத சகல அரவு விஷமுமிறங்கும்.

வேறு.

காற்பலம் இஞ்சியை மேற்றோலைப்போக்கி அதுமுங்கும்படி வெள்ளருக்குப்பால்விட்டு நிழலில் உலர்த்தி.

துருசு, மஞ்சள் வகைக்குப்பலம் அரைக்கால் கூட்டிப்பொடித்துப் பேய்ச்சுரைக் குடுக்கையில் அடைத்துக்கொண்டு நாசியிலூத சகல விஷமும் அடக்கமுந்தீரும்.

சகலவிஷத்திற்கும்,

## அகோரருத்திராஞ்சனம்.

கேளிரவம் பேய்ப்பீர்க்கன் சாற்றில்தோய்த்து
  கெடியானவாளமொடு துத்தந்தாரம்
நீளவேவெண்காரந் தன்னைவரங்கி
  நேராகயிவையந்தும் சமனாய்க்கூட்டி
மாளவேபேய்ப்பீர்க்கன் சாற்றாலாட்டி
  வழித்துருட்டிகாயவைத்து யெடுத்துக்கொண்டு
பாழ்விடங்கள்தீண்டிமண்டைக் கொண்டால்கண்ணில்
  பதித்துவிடுபொரிபட்ட பஞ்சாந்தானே.

இதற்குவிபரம்.

பேய்ப்பீர்க்கன் சாற்றைக் கொதிக்கவைத்து அதில் இரசத்தைச் சாய்க்கவும் இப்படி மூன்றுவிசை மேற்படி சாற்றில் சுத்தியான,

| | |
|---|---|
| இரசம் | அரிதாரம் |
| வாளம் | வெண்காரம் |
| துத்தம் | ஆ 5. |

8

Digitized By Roja Muthiah Research Library

இவை ஐந்துசரக்கும் சமனிடை யெடுத்து கலுவத்திலிட்டு பேய்ப்பீர்க்கன் சாற்றால் அரைத்து மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு விஷந்தீண்டியவர்களுக்கு உமிநீர் அல்லது முலைப்பால் அல்லது கையாந்தகரைச்சாற்றால் யிழைத்துக் கண்ணில் தீட்டினால் விஷம் மீளும்.

சகலவிஷத்திற்கும்.

## கண் கலிக்கம்.

நானென்றஇந்துப்பு இரதங்காயம்
தகட்டுஅரிதாரமிவை சவனுக்கூட்டி
ஏனென்றுசொல்லாமல் பேய்ப்பீர்க்கன்காற்றால்
இருகவரைத்துஉண்டை செய்து யெடுத்துக்கொண்டு
நானென்றகண்ணிலிட்டு உமிழ்நீராலே
நாகமதுநாலுப்பல் நாட்டினாலும்
வானென்றஅண்டமதில் பரிதிகண்ட
வாடையெனும்பனிபோலே வாங்கும்பாரே

இதற்கு-விபரம்.

| | |
|---|---|
| இந்துப்பு | தகட்டுஅரிதாரம் |
| இரதம் | காயம் |

இவை நான்குசரக்கும் சமனிடையெடுத்து பேய்ப்பீர்க்கன் சமூலச்சாற்றினால் இரண்டுநாள்அறைத்து கலுவத்துடன் காற்றிய பிரகு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு உமிநீரால் யிழைத்துக் கண்ணில் தீட்டினால் நாகத்தின் நான்குபல்லும் பட்டபோதிலும் அவ்விஷமான துசூரியனைக்கண்டபனி போல் நீங்கிவிடும்.

சகலவிஷத்திற்கும்.

## சித்தாந்தபீரிசமாத்திரை,

பாரடாசித்தாந்த பீரிசஉண்டை
பாடுகிறேன்மகிழ்வித்து தேவதாளி
கோடாபேய்பீர்க்கு வித்தும்சூதம்
சேர்வாளமிவையைந்தும் சமனுக்கூட்டி
ஏடாசம்பீரச் சாறுவிட்டு
எட்டுநாள்ளரைவைத்து எட்டொன்றுநாள்
சிரடாபபருபோலரைத்துருட்டி
திரமாகநிழலுலர்த்திவைத்துக்கொள்ளே
வைத்துக்கொள்விஷந்தீண்டி சீவன்போனால்
வாகானகையான்சார் யெருக்கன்சாற்றால்
வெற்றியாயொருகுளிகை யுரைத்துக்காதில்
விட்டடைக்கமருசெவியில் காந்தல்காணும்

Digitized By Roja Muthiah Research Library

மெத்தவேகாண்டால் அமுரிதன்னில்
விரைந்திழைத்தொருகுளிகை விழியிற்போட
மூத்தியாய்புதுச்சீலை கண்ணைத்துமூடில்
மூன்றேகால்நாழிகையில் முழிப்பான்காணே
இதற்கு-விபரம்.

| | |
|---|---|
| மகிழ்வித்து | இரசம் |
| தேவதாளிவித்து | வாளம் |
| பேய்ப்பீர்க்கன்வித்து | ஆக 5. |

இவைஐந்துசரக்கு சமனிடையெடுத்துஎலுமிச்சம்பழச்சாறு மிதக்கவிட்டு எட்டுநாள் ஊரவைக்கவேண்டும் சாறு சுவரிப்போனால் மறுபடியும் விடவும். ஒன்பதாநாள் யெடுத்து மைபோல அரைத்து சிறுபயறுபோல் மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும் விஷந்தீண்டினபேர்களுக்கு கையாந்தரைச் சாற்றில் அல்லதுயெருக்கன் சாற்றிலாவது யிழைத்து காதில் விட்டால்மற்றொருகாதில் அனல்வீசும் அப்படி அனல் யெழும்பா விட்டால் சிறுநீர்விட்டு ஒரு குளிகையை யிழைத்துக் கண்ணில் கலிக்கம் தீட்டினால் 3-முக்கால் நாழிகையில் விழித் தெழுந்திருப்பான்.

சுடுகாடுமீட்டான் குளிகை.

காணப்பாகாலன்கடி யெங்கேபோச்சு
காசியினில்விஷந்தீண்டி சாவாரில்லை
வீணென்று யெண்ணாதே வேகம்மெத்த
விருதுகட்டிக்காப்பேனென்று விருதுபோடு
ஊணப்பாஇக்குளிகை சூட்சமாகும்
உருதியிலேசுடுகாடு மீட்கலாகும்
நாணப்பாநாவிரசங் காயங்கோஷ்டம்
நல்வாளப்பருப்பழிஞ்சி பருப்பும்பேயே.
பேய்ப்பீர்க்கன்வித்துகாஞ் சிரையின்வித்து
பேர்சமனாய்தேசிச்சார் மிதக்கவிட்டு
ஓயாமல் ஒருஜாமம் அரைத்துருட்டி
உண்டைசெய்து நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
தீயானகாலவிஷந் தலைமேற்கொண்டால்
சிறுநீரில்உரைத்திடுவாய் கண்ணிலேதான்
ஓபாதவிஷமதுதா னுன்பேர்சொன்னால்
ஒழிந்தொடிங்கிபோச்சுதடாஉண்மைதானே
இதற்கு-விபரம்.

| | |
|---|---|
| நாபி | வாளம் |
| இரசம் | அழிஞ்சிவித்து |
| காயம் | பேய்ப்பீர்க்கன்வித்து |
| கோஷ்டம் | எட்டிவித்து |

Digitized By Roja Muthiah Research Library

இவை 8 தினுசும் சமநிடை யெடுத்து எலுமிச்சம் பழச்சார் மிதக்கவிட்டு ஒரு ஜாமம் கைவிடாமல் அறைத்துபயருபிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திவைத்துக் கொண்டுவிஷந் தீண்டிய பேர்களுக்கு ஒரு மாத்திரையெடுத்து சிறுநீரில் உரைத் துக் கண்ணில் தீட்டினால் விஷம் மீண்டு விழித் தெழுந்திருப் பான்.

## சகலவிஷத்திற்கும்.

## மகாபரஞ்சோதிமை.

போச்சுதிந்தபரஞ்சோதி மையைக்கேளு
  புகழானமகிழ்வித்து அழிஞ்சிவித்து
வாய்ச்சிந்தவெண்குன்றி பருப்புவாளம்
  வகையுள்ளிருக்கினுடன் கெவுரிதாரம்
நீச்சிந்தநவச்சாரந் திரிகடுகுநாவி
  நிருவிஷவெண்கார மனோசிலையும்லிங்கம்
ஆச்சிந்தபொன்மெழுகு நில்லைவித்து
  அழகானசீனமுடன் துருசுவாங்கே

வாங்கியேவகைவகைக்குக் கழஞ்சிவிதம்
  வளமானகெந்திரசம் ஒவ்வொன்றுக்கும்
ஓங்கியேஎலுமிச்சம் பழச்சார்தன்னை
  உருதியாய்விட்டரைப்பா யைந்துநாள்தான்
பாங்கானரவியில்வைத் தெடுத்துக்கொண்டு
  பண்பாகவாய்குவிந்த பீங்கான்தன்னில்
தாங்கியேவைத்தடைத்து நித்தநித்தந்
  தயவாகப்பணவெடை வெற்றிலையிலீயே.

ஈந்திடவேகுஷ்டவகை பதினெட்டும்போம்
  பெரிவிரியன்வகையாறு நாகமெட்டும்
காய்ந்திடுமண்டலிநாலுங் கடுவிடங்கள்பூரான்
  கதருமடாசெவ்வட்டை முதலைமூஷி
ஆய்ந்தரணைவிற்புருதி யாறுமோடும்
  அப்பனேஜன்னிபதி மூன்றுமோடும்
சேர்ந்தபிணிதீயிலிட்ட மெழுகாய்ப்போகும்
  திரமானபரஞ்சோதி திடமாங்காணே.

திடமானமையிதுதான் தேசமெல்லாம்
  ஜெயஸ்தம்பம்நாட்டிவைக்கும் விருதுபோடு
விடமீட்கவல்லருனக் கெதிரியில்லை
  வீணாகவிலகுதனில் மைதான்மெத்த
படிக்குள்ளேஇம்முறைபோ லெதுவுமில்லை
  பார்ப்பதற்குயிதுசுளுகு பரிட்சைமெத்த

Digitized By Roja Muthiah Research Library

நொடிக்குமுன்னேமேனேப்விஷங்கள் ஓடிப்போகும்
நூற்றாண்டுகாலமட்டும் கீர்த்தியாமே
இதற்குவிபரம்.

| | |
|---|---|
| மகிழம்வித்து | நவாச்சாரம் |
| அழிஞ்சிவித்து | சுக்கு |
| வெண்குன்றிப்பருப்பு | திப்பிலி |
| வாளப்பருப்பு | மிளகு |
| காயம் | நாவி |
| மைசாட்சி | நிருவிஷம் |
| கௌரிபாஷாணம் | வெண்காரம் |
| அரிதாரம் | மனேசிலே |
| பொன்மெழுகு | லிங்கம் |
| கெந்தி | இரசம் |

இந்த 20 வகையும் சமனிடை யெடுத்து எலுமிச்சம் பழச்சார்விட்டு இரண்டுநாள் ஊரவைத்து அதன் பிறகுஐந்துநாள்வரையிலும் கைவிடாமல் அரைத்து ஒருஜாமம்சூரியகாந்தியில்வைத்தெடுத்துக்கொண்டு வாய்சிறுத்த பீங்கான் கோப்பையில்வைத்து பதனம்பண்ணி பிரதிதினமும் பணவிடை யெடுத்துவெற்றிலேயில் மடித்துக் கொடுக்க குஷ்டம் 18 வகையும் ஆறுவகை விரியன் விஷமும் எட்டுவகை சற்பவிஷமும் மண்டலி, பூரான், செவ்வட்டை, முதலே, அரணே, எலி, முதாலான விஷங்களும் விப்புருதி ஜன்னி பதிமூன்று இதுகள் யாவும் தீரும். வியாதியும் விஷநிதானமும் பார்த்து 5-நாள் அல்லது 7-10 நாள் வீதம் கொடுக்கவும் பத்தியம் கால்புளிப்பு கூட்டவும்.

---

## நாள்பட்ட விஷத்திற்கு

### உண்டை.

கீர்த்திபாம்வெள்ளருக்கன் சிறியாநங்கை
 கெடிவெள்ளேகாக்கணம்வே ரிவைகள்மூன்றும்
பார்த்திபனேவகைக்குப்பாக் களவரைத்து
 பரிவாகதேசிக்கா யளவுவெல்லம்
நாற்றிசையும்மெய்த்திடவே மைந்தாகொள்ளு
 நற்குருவையரிசிச்சோ றுண்ணச்சொல்லு
மூர்த்திகட்கும்நாட்சென்ற விஷங்கள்போச்சு
 மூன்றுநாள்ராப்பகல் பத்தியமதாமே

ROJA MUTHIAH
47, HOSPITAL ROAD
KOTTAIYUR-623 106

Digitized By Roja Muthiah Research Library

இதற்குவிபரம்.

வெள்ளெருக்கன்வேர், சிரியாநங்கைவேர், வெள்ளை காக்கணம்வேர், இம்மூன்றும் வகைக்குப் பாக்களவுயெடுத்து அரைத்து ளைவுமிச்சங்காயளவு நல்லவெல்லத்துடன் மத்தித்து ஆறுபங்காக்கிகாலை மாலை யிருவேளையும் 3 நாள் கொடுக்கவும் குருவையரிசிச்சாதம் புளியற்ற மிளகுநீர் கூட்டவும் 3 நாள் இராப்பகலும் இப்படியேபத்தியமிருக்கவும், நாட்பட்டு உடம்பில் ஊரியவிஷம்தீரும்.

## விரியன்கடித்த புண்ணுக்கு

### மருந்து.

பத்தியமாம்பாவட்டயிலை வேகவைத்து
பஞ்பானவென்னீரால் கழுவிப்போட்டு
வெற்றியாம்அவ்விலையை வைத்துக்கட்ட
விரியனதுகடிவீங்கி வெடித்தபுண்கள்
சுத்தமாய்ஆறிவிடும் சொன்னேன்சொன்னேன்
சூராதிசூரனென்ற அவுஷதங்கேள்
நித்தியமும்ராச்சொல்லான் பலமேவாங்கி
நெடியபேய்ச்சுரையருகில் நின்றுபாரே.

இதற்குவிபரம்.

விரியன் கடித்து வீங்கி வெடித்தபுண்ணுக்கு பாவட்டைஇலைபோட்டு தண்ணீர்காச்சி அந்த ரிணத்தைக் கழுவிவிட்டு ஈறமில்லாமற்படிக்கி துணியினால் ஒத்திடம்செய்து மேற்படி இலையை வதைக்கிவைத்துக்கட்டவும் இப்படி 5 - 6 வேளைகள் கட்ட விரியன் கடித்த புண் ஆறிவிடும். குருவையரிசிச்சோறும் மிளகுநீரும் கூட்டவும்.

சகல விஷத்திற்கும்.

## சூராதிசூரன்

பாரேனீகொடிகளொன்றும் அறுமலேதான்
பருதிநாள்காய்குடைந்து ராச்சொல்லானை
சேரவேவைத்தடைத்து சதையால்மூடு
செடிச்செத்துஉலருமட்டும் போட்டுப்பாரு
வாரமதிலேயெடுத்து வைத்துக்கொண்டு
வசம்புள்ளிவிரையளவு அரைத்துநீரில்

Digitized By Roja Muthiah Research Library

ஊரவேநாக்கிலிட்டு உள்ளுக்கிவாய்
ஓடுமேவிஷமொழிந்து உடலைவிட்டே.

இதற்கு விபரம்.

இராச்சொல்லான் என்னும் கரியுப்பு ஒரு பலம் பெடுத்து பேய்ப்பீர்க்கன் செடியினிடம் ஆதிவாரத்தில் சென்று அதின் காயை மேல்சதரத்தில் வட்டமாகக் கீரியெடுத்து உள் சதையை யெடுத்துவிட்டு மேற்படி உப்பைக்கொட்டி மேல்பில்லைமூடி கயற்றால் கட்டிவைக்கவும் நாலுநாள் பொறுத்து அதேகாயில் மறுபடியும் ஒருபலம் உப்புப்போட்டுமுன்படியேகட்டிவைக்கவும், அந்த செடியானது வேர்நசித்து உலருமட்டும் காயை அறுக்காமல் யிருந்து மேற்படி செடிசெத்து உலர்ந்துபோன பிரகு ஆதிவாரம் பார்த்து அந்தகாயை அறுத்து வசம்பு, உள்ளி கொஞ்சம் கூட்டி நீர்விட்டு அறைத்து பீர்க்கன் விரையளவு நாக்கில்போட்டு ஊரியபின் மொச்சையளவு உள்ளுக்குக் கொடுக்கவும், சகலவிஷமும் தீரும். இப்படி விஷந்தீருமளவும் சிலநாள்கொடுக்கவும். முன் போலவே பத்தியமிருக்கவும்.

இது அறவுகடித்தவுடன் கொடுக்கப்பட்ட அவுஷதமன்று நாட்பட்டவிஷங்களுக்கு செய்யவேண்டிய சிகிச்சையாம்.

---

சகலவிஷத்திற்கும்,

நஞ்சிற்பாய்ந்தான் மாத்திரை.

வரிசையிதுசொல்லுகிறேன் நாவிருதம்
வளமானதுரிசிதுத்தம்வாளந்தாரம்
தரியாதசிலைகுன்றி பருப்புவெள்ளைச்
சாரணைவேர்மகிழ்வித்து பச்சைப்பாம்பின்
சிரங்கூட்டிச் சரிசமாய் சம்பிரச்சார்
தெளிவாகவிட்டரை நீ கல்வத்திட்டு
உரித்தானவெண்காரங் கூடப்போட்டு
உகந்துதிரிநாளரைத்து உண்டைபண்ணே.
பண்ணியேநிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
பாரவிடந்தீண்டிமிக தலைமேற்கொண்டால்
திண்ணமாய்உச்சியிலும் நுதலிலேயும்
திடமானபிடரியிலுங் கன்னத்தேயும்
நண்ணாகக்கீரிவைத்துக் கட்டும்போது
நாகவிடம்முதற்கொண்டு நசிங்கிப்போகும்
புண்ணியமாமலைக்காத்தான் குளிகைகேளு
புதியதுத்தந்துரிசுசிலை காயந்தானே.

Digitized By Roja Muthiah Research Library

## இதன்விபரம்.

| | |
|---|---|
| நாவி | துரிசு |
| இரசம் | துத்தம் |
| வாளம் | சாரணைவேர் |
| அரிதாரம் | மகிழம்வித்து |
| மனோசிலை | வெண்காரம் |
| வெள்ளைக்குண்டுமணிபருப்பு | பச்சைப்பாம்புதலை |

இவையாவும் சமனிடையாய் நிருத்தெடுத்து 3-நாள் வரையி லும் அரைத்தபிறகு நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு விஷந் தீண்டி தலைக்கேறி சுவாசமில்லாதவர்களுக்கு உச்சியிலும், நெற்றி யிலும், பிடரியிலும் கன்னத்திலும், கத்தியிற் கீறி இம்மருந்தை வைத்து கட்டினால் உடனே விஷம் நசித்து உயிர்மீண்டு டெழுந் திருப்பான்.

---

## மலைக்காத்தான்குளிகை.

தானென்றவாளமரி தாரங்கெந்தி
 ஜாதிலிங்கம் நாவிவெள்ளை கெவுரிசூதம்
ஏனென்றதொட்டியொடு யெலிபாஷாணம்
 யெரிமிளகு குதிரைப்பல் பாஷாணந்தான்
வானென்றதிப்பிலியோ டிவைகளெல்லாம்
 வளமாகசமன்கூட்டி மேனிச்சாறு
ரீநீனைவாய்விட்டரைத்து உண்டைபண்ணி
 நிழலுலர்த்திமிளகுபொடி தன்னில்சேர்த்தே.

## இதற்கு விவரம்.

| | |
|---|---|
| துத்தம் | கெந்தி |
| துருசு | ரசம் |
| காயம் | லிங்கம் |
| மனோசிலை | குதிரைப்பல்பாஷாணம் |
| நாவி | தொட்டிபாஷாணம் |
| கெவுரிபாஷாணம் | எலிபாஷாணம் |
| வாளம் | திப்பிலி |
| அரிதாரம் | மிளகு |

இவை சமனிடை யெடுத்து பொடிசெய்து குப்பைமேனிச் சார்விட்டரைத்து உண்டைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு விஷந்தீண்டி வந்தவர்களுக்கு நஞ்சிர்பாய்ந்தான் மாத்தி ரைபோல் இதையும் உபயோகித்தால் விஷமொழிந்து உயிர்மீண் டெழுந்திருப்பான்.

Digitized By Roja Muthiah Research Library

## சகலவிஷத்துக்கும் நசியம்.

| | |
|---|---|
| முருக்கிலை | மிளகு |
| தும்பை | வெற்றிலை |
| எருக்கிலைபழுப்பு | நவாச்சாரம் |

இவைகளைத்தட்டி நாசி காதில் நசியமிட சகலவிஷமும் நீங்கும்.

### வேறு.

| | |
|---|---|
| தும்பையிலை | வசம்பு |
| அவுரியிலை | உள்ளி |
| பெருங்காயம் | மிளகு |

சிறுபிள்ளைகளின் அமுரிவிட்டுத் தட்டிக்காது நாசியில்விட்டால் கீழ்நோக்கும்.

### வேறு.

| | |
|---|---|
| தைவேளையிலை | சுக்கு |
| வேலிருப்பத்தியிலை | மிளகு |
| வெற்றிலை | வசம்பு |
| கரியுப்பு | வெள்ளுள்ளி |

இவைகளையோர் நிறையாய்யெடுத்து சிறுநீர்விட்டுத் தட்டி நாசியில் நசியமிட அடங்கின உயிர்திரும்பும்.

## விரியன்பாம்புகளின் கடிக்குறியும் அவைகளுக்குச் சிகிச்சையும்.

ஷை விரியன் வகைகள் ஆறும் அவற்றில் குருவிரியன் கடித்தால் செந்நிறமாயும், பொன்னிறமாயும் நீர்வடியும், கடிவாயிற் றசைத்துள்ளி வீங்கும், கடுக்கும் உடல்வெதுப்பும்.

நாள்பட்ட வரகரிசியும் பிரம்மரப்பட்டையும் இடித்துமாவு செய்து வெள்ளாட்டுப்பாலில் சமைத்து மூன்றுநாள்தின்று மறுபத்தியம் மூன்றுநாளிருக்கத் தீரும் உப்புப்புளிதள்ளவும்.

### செவ்விரியன்கடி.

செவ்விரியன் கருவிரியன், பசுமைநிறவிரியன் இவை கடித்தால் கடிவாயில் உதிரம் வடியும், வீக்கம் கடுப்பு இரத்த வாந்தியுண்டாகும்.

செவ்விரியன் கடித்தவுடன் ஒடுவைவேரை அரைத்துக்கொடுக்கத்தீரும். வன்னியிலையை தேசிக்காய்ப் பிரமாணம் அரைத்து ஆவின் வெண்ணெயில் மத்தித்து உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும் பூசத்தீரும்.



Digitized By Roja Muthiah Research Library

வெள்வேலம்பட்டையை ஆவின்மோரில் அரைத்துக் கலக்கிக் கொடுக்கத்தீரும்.

### கருவிரியன் கடி.

கருவிரியன் கடித்தாலும் பசுமைநிறவிரியன் கடித்தாலும் அரைக்காற்படி மிதிபாகலிலைச்சாற்றில் காற்பலம் மிளகைப்பொடித்துப்போட்டுக்கொடுக்க மேற்படி விரியன்களின் விஷமும் மற்ற விரியன்களின் விஷமும் தீரும்.

### பெருவிரியன் கடி.

பெருவிரியன் கடித்தால் பேய்க்குமட்டிவேர், அவுரிவேர், தலைச்சுருளிவேர், மிளகு சமனுயிடித்துப் பேய்ச்சுரைக் குடுக்கையில் அடைத்துக்கொண்டு திரிகடிப்பிரமாணம் சிறுபிள்ளைகளின் நீரில் கலக்கிக்கொடுத்து கடிவாயிலும் பூசத்தீரும். இம்பூரல் கீழ்காய் நெல்லி கோழிக்கால் மிளகு மஞ்சள் இவைகளை ஓர் நிறையாய் சிதைத்து நல்லெண்ணெயிற் காய்ச்சி கடிவாய்ப் புண்ணிற் போட்டு ஆத்தியிலையை வெதுப்பிப் பொடித்துத் தூவிவர புண்கள் ஆரிவிடும்,

### கத்திரிவிரியன் கடி.

கத்திரிவிரியன் கடித்தால் உதிரம் வடியும் அதில் வீக்கம் கடுப்பு எரிச்சல் மயக்கம் காணும் உடல் வெதும்பும்.

### புல்விரியன் கடி.

புல்விரியன் கடித்தால் கடிவாயில் விலச்சுண்டுவது போல் கண்டி வலித்து வீங்கும் உடற் கணுக்கள் வீங்கும் தூக்கம்போல் மயக்கங் காணும்.

### சுழற்றுக்கோல் விரியன்கடி.

சுழற்றுக்கோல் விரியன் கடித்தால் தலைசுழலும் உடலுளையும் காந்தும் நடுங்கும் செவிமந்திக்கும் கண்பஞ்சடையும் மேற்சொல்லிய எவ்வகை விரியன் கடித்தாலும் உடனே ஒரு குன்றுமணிப் பிரமாணம் துருசைப் பத்துவெற்றிலையில் வைத்து மடித்துத்தின்னக் கொடுக்க மேற்படி விஷங்களிறங்கும் கடிவாய் வீங்காது கடுப்பு எரிவு உடனேதீரும்.

அவுரிவேரை அரைத்து ஆவின்பாலில் கொடுக்க சகல விரியன்களின் விஷமும் தீரும்.

சன்னிநாயகம் சமூலம் இடித்துச் சாறுவாங்கி அரைக்காற்படி உள்ளுக்குக் கொடுத்து மேற்படி யிலையை அரைத்து உடல் முழுக்கப்பூசிவிட சகல விரியன்களின் விஷமும் தீரும். சிரங்கிநாயகத்தையும் இப்படியே செய்யத் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

குட்டித்தக்காளியிலே பெருந்தக்காளியிலே இவ்விரண்டையும் இடித்து அரைக்காற்படிச் சாறுவாங்கி உள்ளுக்குக்கொடுத்து மேலிலும் துவாலையிட மேற்படி விஷங்கள் தீரும்.

## கடிவாயிற் பூசும்மருந்து.

தலைமயிரைக்கருக்கி ஆவின் வெண்ணெயில் மத்தித்துக் கடிவாய் வீக்கத்திற் பூசவற்றும்.

பாவட்டையிலையை அவித்து அந்தத்தண்ணீரால் புண்ணைக் கழுவி வெற்றிலையை வைத்துக் கட்டிவரத் தீரும்.

அம்மான் பச்சரிசியிலையை அரைத்துப்பூசிவர வீக்கம்கடுப்பு எரிவும் தீரும்.

தக்காளிவேர், நாயுருவிவேர், இவைகளைச் சிறுநீர் விட்டரைத்துக் கடிவாயிற் பூசிவர வீக்கம் வற்றும் உடம்பிற் பூசி முறுக்க மயக்கந் தீரும்.

கோழிச்சதையையாவது அதின் கொழுப்பையாவது மூன்று நாள் வைத்துக்கட்டி அப்பாற் காடியிற்கழுவி இதனடியிற் கண்டிருக்கிற எண்ணெயைப் போடவும்.

## சகல விரியன் விஷகடிக்கும், வீக்கத்திற்கும், புண்ணுக்கும் போடத் தயிலம்.

| | |
|---|---|
| இரண்டு கோழுக்கால் | மஞ்சள் |
| இம்பூரல் | மிளகு |
| கீழ்காய்நெல்லி | இந்துப்பு |

இவைகளைச் சிதைத்து நல்லெண்ணெயிற் காய்ச்சி புண்ணிற் போடத்தீரும்.

| | |
|---|---|
| மூஞ்சூறு | சுக்கு |
| வசம்பு | உள்ளி |

இவைகளைச் சிதைத்து நல்லெண்ணெயில் காய்ச்சி புண்ணிற் போட சகல விரியன்களின் கடிவிஷமும் புண்ணும் ஆறும்.

## கருவழலைமுதலிய மற்ற சில்லரைப் பாம்புகளின் கடிவிஷக்குறியும், அவைகட்குச் சிகிச்சையும்.

உடல் தீப்போற் காந்தும்வியர்க்கும் உள்ளங்கால் கை சிவக்கும் கண்மங்கும் நெஞ்சடைக்கும் கோழைகட்டும் பல்வலிக்கும்.

மற்றவகை வழலைகடித்தால் உடலில் பசுமை நரம்புதோன்றும் வியர்க்கும் வாயில் நீர் வடியும் கடிவாயில் உதிரம் வடியும் வாய் வளுவளுக்கும்.

Digitized By Roja Muthiah Research Library

## கருவழலைக்கடி.

| | |
|---|---|
| வேலிப்பருத்திவேர் | அதின் இலை |
| அதின் இலை | நீலிவேர் |
| வெள்ளைச்சாரணைவேர் | பெருங்காயம் |

இதுகளை ஓர் நிறையாயரைத்துத் தேசிக்காய் பிரமாணம் உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும் பூசத்தீரும்.

## மற்றவழலைகள் கடித்தால்.

நற்சூழியிலை, வசம்பு, உள்ளி இவைகளை அரைத்து கடிவாயிற் பூசி உடம்பிற்றேய்த்து முறுக்கவும்.

| | |
|---|---|
| சிற்றுமணக்கின்வேர் | பழம்புளி |
| குன்றிமணிவேர் | நிலப்பனைக்கிழங்கு |

இவைகளை ஓர் நிறையாய் அரைத்து சிறுநீரிற் கலக்கிக்கொடுக்கத்தீரும்.

உப்பிலிவேர், நிலப்பனைக்கிழங்கு, இவ்விரண்டையும் ஓர் தேசிக்காய்ப்பிரமாணம் அரைத்து சிறுநீரிலாவது ஆவின் வெண்ணெயிலாவது கொடுக்கத்தீரும்.

## மயக்கரவுகடி.

மயக்கரவு கடித்தால் இருவிழியும் சுழலும் அடிக்கடி மயக்கங் காணும் முகம் கருக்கும் பரபரப்பாய் விஷமேறி மார்பை அடைக்கும் கைகால் நரம்புகள் விரைக்கும்.

கரிப்பாலையிலையை அரைத்து ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் மூன்றுநாள்கொடுத்து மிளகுபுகையை நாசியிலும் முகத்திலும் காட்டத்தீரும்.

## முருக்கரவுகடி.

முறுக்கரவு கடித்தால் உடலைத் திரிகி முறுக்கும் அங்கம் பதறும், இதற்கு பெருங்காயம், சிறுசின்னியிலை, வசம்பு இவைகளை ஓர் நிறையாயரைத்துத் தேசிக்காய்ப் பிரமாணம் கொடுத்து அதை உடம்பிற்பூசி முறுக்கி நாசியில் நசியமிடத்தீரும்.

அரைக்காற்படி மிதிபாகற்சாற்றில் காற்பலமிளகைப் பொடித்துப்போட்டுக் கொடுத்தாலும் ஒரு தேசிக்காய்ப்பிரமாணம் நிலப்பனைக்கிழங்கை அரைத்து வெந்நீரிற் கொடுத்தாலும் தீரும்.

## கூழைப்பாம்புகடி.

கூழைப்பாம்பு கடித்தால் சிலகாலத்துக்குப்பின் குஷ்டம் போற் றேகத்திலுண்டாகி கால் கை விரல்கள் குறையும் இது கருமையும் வெண்மையும் கலந்த புள்ளியுள்ளதாயிருக்கும்.

இதற்கு உசிலம்பட்டையை ஆவின்பால் விட்டிடித்துப் பிழிந்து அரைக்காற்படிவீதம் ஏழுநாள் கொடுத்து உப்புப்புளி தள்ளி பத்தியமாயிருக்க மேற்படி விஷம் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

## செஞ்சோர்வுகடி,

செஞ்சோர்வுகடித்தால் உடல்வெங்கும் புள்ளிபோற்றடித்து சிவந்தநிறமாயிருக்கும்.

இதற்கு எருக்கம்பால் ஏழுசொட்டு பனைவெல்லத்தில் கொடுக்கவும் இந்தப்படி மூன்று தடவை ஒன்றைவிட் டொருநாள் கொடுக்கத்தீரும்.

## கருஞ்சோராகடி.

கருஞ்சோர்வு கடித்தால் தேகம் முழுதும் கருத்துத் தடித்துத் திமிராயிருக்கும்.

இதற்கு நன்னாரிவேர், சிரியாநங்கைவேர் இவ்விரண்டையும் சமனாய் ஒரு தேசிக்காய்ப்பிரதாணம் அரைத்து ஆவின் பாலில் கொடுக்கத்தீரும்.

## புடையான் விஷம்,

புடையான் பாம்பானது அதின் வாலின் முனையால் மனிதர் முதலிய ஜீவஜெந்துக்களை குத்தும் அந்த விஷம் தேகத்திற் சில நாள் தங்கியிருந்து அப்பாற் தேகமெங்கும் படைகளுண்டாய்ப் பொத்துச் சீழ்வடியும்.

அதற்கு ஒருபிடி புத்தான்சோற்றைக் காற்படி நல்லெண்ணையிற் போட்டுக்காய்ச்சிக் கொஞ்சம் உள்ளுக்குக் கொடுத்துக்கடிவாயிலும் பூசத்தீரும்.

பிராயம்பட்டையும் நாள்பட்ட வரகரிசியும் இடித்து மாவுசெய்து களி கிண்டி 3-நாள் சாப்பிட்டு மறுபத்தியம் 3-நாளிருக்கத் தீரும்.

## நெடுங்கழுத்துப் புடையன் விஷம்.

நெடுங்கழுத்துப் புடையன் விஷத்துக்கு கொல்லன் கோவைக்கிழங்கைப் பாலில் அரைத்துக்கொடுக்கத் தீரும்.

புகையூரல், அவுரியிலை, இலுப்பையரப்பு இவைகளைக் கொடிக்கள்ளிப்பால் விட்டரைத்துப்பூசப் புடையன் குத்தும்விக்கமும் தீரும்.

## தட்டைப்புடையன் விஷம்.

தட்டைப்புடையன்விஷத்துக்குபத்துவெள்ளெருக்கம்பூவை வெற்றிலையிற் சுருட்டித் தின்னக்கொடுத்து வசம்பை நெருப்பிலிட்டு அந்தப் புகையை நாசியிலேற்றத் தீரும்.

## வரிப்புடையன் விஷம்.

வரிப்புடையன் விஷத்துக்கு புத்தான்சோறும் வசம்பும் எருக்கம்பால்விட்டுத் தட்டி நாசியில் நசியமிடத் தீரும்.

Digitized By Roja Muthiah Research Library

## ஊதுபுடையன் விஷம்.

ஊதுபுடையன் விஷத்தால் கடிவாய்வீங்கி விஷமேறும் கைகால் உளையும் உடல் வீங்கும் கண்ணில் நீர் வடியும் மயக்கமுண்டாம். வீழிப்பூவை ஒரு தேசிக்காய்ப்பிரமாணம் அரைத்துக்கொடுக்கச் சகல புடையன் விஷங்களும் தீரும்.

| | |
|---|---|
| காட்டுக்கருணைக்கிழங்கு | புகையூரல் |
| கொட்டாங்கரந்தை | இலுப்பைப்பிண்ணாக்கு |

இவைகளைச் சிறுநீர்விட்டரைத்துப் புடையன் குத்தும் வீக்கத்திற் பூசத்தீரும்.

## இரத்தமண்டலிகடி.

இரத்தமண்டலி கடித்தால் கடிவாயிலும் மயிர்க்காலிலும் இரத்தம் தாரைதாரையாய் வடியும்.

அதற்கு சிறுசெப்படையையாவது கொல்லங் கோவையிலையையாவது இடித்துச் சாறுவாங்கி அரைக்கால்படி 3-நாள் காலையில்கொடுத்து உடம்பிலும் அந்தச்சாற்றைப் பூசத்தீரும்.

வெள்வேலம் பட்டையைக் காடியாவது ஆவின் மோராவது விட்டிடித்து அரைக்கால்படி கொடுக்கத்தீரும்.

ஆனை நெருஞ்சில்லையைச் சிறுநீர் விட்டிடித்துப் பிழிந்து அரைக்கால்படிசாறு உள்ளுக்குக்கொடுத்து உடலிலும் பூசத்தீரும்.

## சீதமண்டலிகடி.

சீதமண்டலி கடித்தால் உடல் குளிரும் நடுக்கும் வியர்வை மிகவுமுண்டாம்.

முத்தெருக்கஞ்செவி அல்லது வேப்பம் பட்டையைக் காடிவிட்டுச் சிதைத்து அரைக்கால்படி உள்ளுக்குக் கொடுத்து அதை காடியில் வேகவைத்து ஆவிபிடிக்கத் தீரும்.

## திமிர்மண்டலிகடி.

பொன்முசுட்டைவேர் ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் அரைத்துக்கொடுத்து கடிவாயில் பூசத்தீரும்.

## சகலவிஷத்திற்கும்,

# சஞ்சீவி யுண்டை.

பாடாஉயிர்தருஞ் சஞ்சீவியுண்டை
பகருகிறேன்துரிசிதுத்தம் மிளகுசேர்த்து
நேரபாளமிந்த இடைக்குப்போட்டு
நினைவாகவெலுமிச்சம் பழத்தின்சாற்றை

Digitized By Roja Muthiah Research Library

வாரடாமூன்றுநா ளூரவைத்து
வடித்தெடுத்து நாலாநாளச்சாற்றாலே
தோரடாவரைத்துண்டை செய்துக்கண்ணில்
தேய்த்துவிடவெவ்விஷமும் தீர்ந்துபோமே.

### இதற்குவிபரம்.

துருசு, துத்தம், மிளகு சமனிடை இந்த 3-க்கும் சரியிடை வாளம் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றை மிதக்கவிட்டு 3-நாள் ஊரவைத்து நாலாநாள் யெடுத்து மேற்படி சாறுவிட்டு அரைத்து பயறளவுயெடுத்துக் கண்ணில் தீட்டினால் சகல விஷமும் தீரும்.

---

### சகலவிஷத்திற்கும் நசியம்.

குப்பைமேனியிலை வெற்றிலை, நவாச்சாரம், இவைகளை சிறு நீர் விட்டுத்தட்டி துணியிற்கட்டி நாசியில் நசியமிட [illegible]மும் தீரும்.

### சோழிமண்டலி கடி.

நன்னாரிவேரை ஒருதேசிக்காய்ப்பிரமாணம் அரைத்து ஆவின் பாலில் கொடுத்தாலும் வெள்வேலம் பட்டையைக் காடி விட்டிடித்து அரைக்காற்படி சாறுகொடுத்தாலும் நீங்கும்.

| | |
|---|---|
| அமுக்குரா | இண்டு |
| சூரை | தக்காளி |
| புங்கு | இலுப்பை |

இவைகளைச் சிறுநீர்விட்டு அரைத்துப் பூச கடிவாய் வீக்கந் தீரும்,

### இரத்தவிரியன், இரத்தமண்டலி, இரத்தப்புடையன் விஷங்களுக்கு.

வெள்வேலம்பட்டையை ஆவின்மோர்விட்டு யிடித்துப் பிழிந்து அரைக்காற்படிசாறு உள்ளுக்கு கொடுத்தாலும் அல்லது கஞ்சாங்கோரைச்சாற்றை அரைக்காற்படிவீதம் கொடுத்தாலும் கொடிவேலிவேரை அரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஆவின்பாலிக் கொடுத்தாலும் மேற்படி விஷங்கள் தீரும்.

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாளைவேர் | வெள்ளெருக்குவேர் |
| கவுதும்பைவேர் | மருக்காரைவேர் |

Digitized By Roja Muthiah Research Library

இவைகளை ஓர் நிறையாய் அரைத்து உடம்பிற் பூசி மூழ்க்க மேற்படி விஷங்கள் தீரும்.

சுருட்டைப்பாம்புகடி விஷத்திற்கும்,
குழிப்பாம்புகடி விஷத்திற்கும்.

கொல்லங்கோவை
தலைசுரிளி
அழுக்குரு
மூப்புரண்டி
கொடிவேலி
பேய்க்குமட்டி
அவுரி
ஆடுதீண்டாப்பாளை
வெள்ளெருக்கு

இவைகளின் மூலம் ஓர் நிறையாய்ச் சூரணஞ்செய்து பேய்ச் சுரைக் குடுக்கையில் வைத்துக்கொண்டு திரிகடிப் பிரமாணம் வெந்நீரிற் கொடுக்கத்தீரும். மேற்படி விஷக்கடியாலுண்டாகும் புண்கள் ஆறும்.

## செவிப்பாம்புஎன்ற செய்யான்கடி.

[illegible]மை செம்மை நிறமாய் சீகம்புற்போல் நீண்டதாயிருக் கும் இது கடித்தால் தேகமெங்கும் சிறு தடிப்பும் நமைச்சலும் உண்டாம் இது செவியில் நுழைந்தால் பிராணபயமுண்டாம்.

கோவையிலை
வெற்றிலை
கொழுஞ்சி
வேலிப்பருத்தி
முடக்கொத்தான்

இவைகளின் இலைகளை யிடித்துச் சாறுவாங்கி கொதிக்க வைத்து கடிவாயிற் பூசக் கடுப்புத்தீரும்.

பேயப்பீர்க்கம்வேர், மிளகு இவை சமன் பொடித்து ஆவின் வெண்ணெயில் மத்தித்து உள்ளுக்குக் கொடுக்கத்தீரும்,

தூதுளைவேர், நல்வேளைவேர் இவ்விரண்டையும் அரைத்துக் கடிவாயிற் பூசத்தீரும்,

## பூரான்கடித்தால்.

அரைக்காற்படி வன்னியிலைச்சாற்றில் காற்பலம் நாகதாளி வேரை அரைத்துக்கலக்கி ஆறுநாள் அந்திசந்தி கொடுக்கவும் உப் புப்புளித்தள்ளிப் பத்தியமாயிருக்கப் பூரான் செய்யான் விஷந்தீ ரும். மேலும் அவுரிச்சாற்றில் மிளகுதூள் சேர்த்து முன்போற் கொள்ள மேற்படி விஷங்கள் தீரும்.

## செவ்வரணை நக்கினல்.

சுக்கு, வசம்பு கரியும் ஓர் நிறையாய்ப் பொடித்து திரிகடி பிரமாணம் உள்ளுக்குக் கொடுத்து வெண்சாரணை வேரை அரைத்

Digitized By Roja Muthiah Research Library

உடம்பிற்பூசி முறுக்கத்தீரும். மேலும் கச்சந்திராய்வேரும் உள்ளிப்பூடும் அரைத்துக்கொடுக்கத் தீரும்.

பெரிய அரணை நக்கினால்.

மூக்கரைச்சாரணைவேரை அரைத்து ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஆவின்பாலிற் கொடுக்கத்தீரும்.

சிலந்திப்பூச்சி கடித்தால்.

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாளைவேர் | இலவங்கப்பட்டை |
| மரள்கிழங்கு | ஏலம் |

இவைகளில் ஒன்றை கொட்டைப்பாக்களவு அரைத்து உள்ளுக்குக் கொடுத்துக் கடிவாயிலும் பூசத்தீரும்.

பதினெட்டுவகை வண்டுகடி விஷத்திற்கும்.

வண்டு கொல்லிப்பட்டையை அரைத்து கொட்டைப்பாக்களவு எட்டுநாள் கொடுத்து உடம்பிலும் பூசத்தீரும்.

ஆடுதீண்டாப்பாளை வேரையாவது பிராய்வேரையாவது சூரணஞ்செய்து சாப்பிட்டுவரத்தீரும்.

வெள்ளருகு, சிறியாநங்கை, வெள்ளைக்காட்டான் இவைகள் மூன்றையும் சமூலம் சூரணஞ்செய்து சாப்பிட்டுவர சர்வவண்டு கடி விஷங்களுந்தீரும்.

செவ்வட்டை கடிவிஷம்.

எட்டிக்கொட்டையை ஆவின் நெய்யில் வேகவைத்து ஒரு காசிடைவீதம் சாப்பிட்டுவரத் தீரும்.

புனல்முருங்கைவேர், நத்தச்சூரிவேர் இவ்விரண்டும் சூரணித்து அதில் வேப்பம் பட்டைத்தயிலம் காசிடைவைத்து உண்ண மேற்படி அட்டை விஷமும் காட்டு அட்டைவிஷமும் தீரும்.

புழுதிஉண்ணி, காட்டுண்ணி, சரகுண்ணி,

இவைகள்கடித்தால்.

குப்பைமேனியிலையும், உப்புங்கசக்கித் தடவத்தீரும்.

காணுக்கடிக்கு கருஞ்சிவதைவேரை ஒரு, கொட்டைப்பாக்குப்பிரமாணம் உள்ளுக்குக்கொடுத்து பெருஞ்சின்னியிலையை அரைத்து உடம்பிற்பூசி முறுக்கத்தீரும்.



Digitized By Roja Muthiah Research Library

செஞ்சாரை, கருஞ்சாரை, வெண்சாரை, மஞ்சட்சாரை,

என்ற நான்கு வகையிலொன்று அடித்தால்.

அவுரிவேரும், மிளகும் அரைத்து உள்ளுக்குக்கொடுத்து அந்த யிலைச்சாற்றை உடம்பிற்பூசி முறுக்கத்தீரும்.

தேள் நட்டுவாக்காலி கொட்டினல்.

| | |
|---|---|
| காஞ்சிரைவேர் | நாய்க்கொட்டான்வேர் |
| அவுரிவேர் | பொன்முசுட்டைவேர் |

இன்னன்கையும் ஓர் நிறையாயிடித்துச் சூரணஞ்செய்து திரிகடிப்பிரமாணம் இளவெந்நீரில் கொடுக்கத் தேள் நட்டுவாக்காலி விஷம்தீரும்.

| | |
|---|---|
| பொன்முசுட்டை | ஆடுதீண்டாப்பாளை |
| முப்புரண்டி | வேலிப்பருத்தி |
| நாகதாளி | நிலவேம்பு |

இவைகளின்வேரை ஓர் நிறையாயிடித்துச் சூரணஞ்செய்து திரிகடிபிரமாணம் வெந்நீரில்கொடுக்க ஷை விஷங்கள் தீரும்.

| | |
|---|---|
| கொல்லங்கோவைக்கிழங்கு | மாவிலிங்கைவடவேர் |
| ஆடுதீண்டாப்பாளைவேர் | |

இந்த 3-ல் எதையாவது ஒன்றை ஆதித்தவாரத்தில் வெட்டிவந்து கொஞ்சம் வெற்றிலையில்வைத்து தின்னக்கொடுத்து கடிவாயிலும் பூசத்தீரும்.

எட்டிவிரையை முலைப்பாலினுரைத்துக் கொஞ்சம் உள்ளுக்குக்கொடுத்துக் கடிவாயிலும் பூசத்தீரும்.

முத்தின செவ்வலரிவேர் பட்டையை வெள்ளெருக்கம்பாலில் 3-நாள் ஊரப்போட்டு நிழலில்உலர்த்தி வைத்துக்கொண்டு கொஞ்சம் வெற்றிலையில்வைத்துத் தின்னக்கொடுத்து அதைஎருக்கம்பாலில் உரைத்துக் கடிவாயிற்பூசதீரும்.

மனிதருடைய கெகத்தைச்சீவித் துணியிற் சுருட்டித் தீயிற் கொளுத்தி ஊதி அந்தப்புகையை நாசியிற்பிடிகக மேற்படி விஷம் தெரியிறங்கும்.

Digitized By Roja Muthiah Research Library



உ

சிவராமஜெயம்.

## சகலமான சற்பவிஷத்திற்கும்

# பரணி மருந்து.

இந்த பரணி மருந்தானது எமது முன்னோர்கள் முதல் சுமார் மூன்று தலைமுறைகளாகக் கையாடிவரப்பட்டது மிகவும் அனுபோகமானது இந்த அவுஷதத்தை யாவரும் செய்து வைத்துக் கொண்டிருந்தால் விஷமென்பதற்கு எள்ளளவும் பயப்படவேண்டியதில்லை இம்மட்டில் சொல்லிய முறைகளெல்லாம் பல சாஸ்திரத்திலிருந்து மொழிபெயர்த்ததே யொழிய இந்த பரணி மருந்து ஒன்று மாத்திரம் மிகவும் அனுபோகமானது.

| | | |
|---|---|---|
| வெள்ளைபாஷாணம் | விராகனிடை | 1 |
| மனோசிலை | ,, | 1 |
| இரசம் | ,, | 1 |
| துரிசி | ,, | 1 |
| நெல்லிக்காய்கெந்தகம் | ,, | 1 |
| பெருங்காயம் | ,, | 1 |
| வேப்பம்பருப்பு | ,, | 1 |

ஆக தினுசுகள் 7-க்கும் மொத்தம் விராக்னிடை 7-ம் சுத்தி செய்த நேர்வாளப்பருப்பு விராகனிடை 14 ஆக மொத்தம் 21 விராகனிடையும் கலுவத்திலபோட்டு வெள்ளெருக்கம்பால் ஆழாக்குப் பிடித்துவந்து கொஞ்சகொஞ்சமாய் விட்டுவிட்டு அறைக்கவும் ஷை ஆழாக்குப்பாலும்விட்டு இரண்டு ஜாமம் அறைத்தபிறகு வேப்பெண்ணை அறையாழாக்குவிட்டு ஒரு ஜாமம் அறைக்கவும் மெழுகுபதமாய் அறைத்து வழித்து எருமைக்கொம்பு டப்பியில் வைத்துக் கொள்ளவும் விஷந்தீண்டி வந்தவர்களுக்கு உளுந்துப் பிரமாணம் யெடுத்து வெற்றிலையில் வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும் (இதற்குப் பத்தியம்) மோர் சாதம் கொடுக்கவும் அல்லது சுட்டபுளி வருத்தஉப்பு கூடிய மிளகுநீர் சாதம்கொடுக்கவும் அன்றிரவு நித்திரைசெய்யக் கூடாது.

விஷம் தலைக்கேறி பற்கிட்டியிருந்தால் உச்சியில்கீரி அந்தகீரலுக்குள் இந்தமருந்தில் உளுந்தளவுவைத்து அழுத்தி திரும்பவும் கொஞ்சம் மருந்துவைத்து அழுத்திதேய்த்து வட்டமாக ஒட்டுபி

Digitized By Roja Muthiah Research Library

ல்லே நருக்கி உச்சியில் அழுத்தமாக வைத்துக் கட்டவேண்டியது. வென்னீரில் உளுந்தளவு மருந்திழைத்து பல்லேநீக்கி உள்ளுக்குச் செலுத்தவேண்டியது மூன்றேமுக்கால் நாழிகையில் மூர்ச்சையானவன்போல் யெழுந்திருப்பான் பத்தியம் முன்போலவே செய்யவேண்டும்.

ஆடு மாடு முதலிய மிருகங்களுக்கு குண்டுமணி யளவு வெற்றிலைச்சாற்றிலாவது வெனனீரிலாவது இழைத்து மூங்கிற் குழையினல் உள்ளுக்குச் செலுத்தவேண்டியது, குருவையரிசி கஞ்சிக்காச்சிக் கொடுக்கவும்.

## பத்திய விபரம்.

முன்கூரியபடி மனிதருக்கு மருந்துகொடுத்தபிறகு 24-மணி நேரம் வரையில் ஆகாரம், தாகம், நித்திரை இதுகள் கூடாது, அதன்பிறகு குருவையரிசிச்சாதம் மிளகுநீர் இவை கொடுக்கலாம். ஆடு மாடு முதலிய மிருகத்திற்குக்கூட 24-மணிநேரம் வரையில் ஆகாரம் வைக்கல் தண்ணீர் இதுகள் காட்டக்கூடாது. அதன்பிறகு கருப்புநெல் அல்லது மணக்கத்தை அல்லது குருவையரிசியெடுத்து கஞ்சிகாச்சி மாடுகளுக்கு 2-படி கஞ்சிக்கு அதிகப்படாமல் கொடுக்கவும். அதற்குப் பிறகு தாங்கள் வழக்கம்போல் கொடுக்கிற தீனிகொடுக்கலாம்.

## மருந்துசெய்யும் காலம்.

இம்மருந்து செய்யவேண்டியவர்கள் ஆதிவாரத்தில் சகல மருந்தும் தயார் செய்துக்கொண்டு நடுவர்சலில் சுத்திசெய்து கலுவமும் மருந்துகளும்வைத்து சூரியபகவானுக்கு தேங்கா யுடைத்து தூபதீபங்கொடுத்து நமஸ்கரித்து ஆகாயத்தைப்பார்த்து கெருடபகவானே நினைத்து நமஸ்காரம்செய்து அறைக்கவேண்டியது. அறைக்கும்போது புளிப்புமோரும் கூழும் கரைத்து திருப்தியாக சாப்பிட்டுவிட்டு அறைக்கவேண்டியது. மேற்கூரிய கணக்குப்படி 3-ஜாமம் அறைத்தபிறகு விளக்கெண்ணே தேய்த்து தலைமுழுகவேண்டியது.

நல்லபாம்பு விஷத்திற்கு.

நேரும்வாளப்பருப்பெடுத்து நேர்ந்தசுன்னம்வைத்தரைத்து
காரும்வெத்திலைபாக்கிலிட்டு கரையமெண்ணுமுழிங்கிவர
மாரும்வாந்திபேதியுமாய் மண்டையிலேறும்விஷந்தீரும்
பாரும்பத்தியம்பாசிபயர் பச்சரிசியும்பால்கூட்டே.

Digitized By Roja Muthiah Research Library

## தேள் கடி விஷத்திற்கு.

விருட்சிக் மாத்திரை 50-எட்டிப்பழச்சுளையுடன் வெள்ளைபாஷாணம் பலம் 1 சிறுதுண்டுகளாகயிட்டு ஆட்டு கோமையம் வெள்ளெருக்கன்பால் இரண்டு பலம்விட்டு மூடி 40-நாள் புதைத்து எடுத்து பாஷாணமாத்திரம் எடுத்து எருக்கன் பாலா லரைத்து மாத்திரைசெய்து ஜலத்திலிழைத்து கடிவாயில் தடவி அனல்காட்டவிஷம் நீங்கும்.

### சகல எலிகடிக்கும் வேறுமுறை.

ஆடுதிண்ணாபாளைவேர் விளாம்பட்டை மஞ்சள் வகைக்கு பலம்-வ-படி எள்ளெண்ணையில், சித்திரமூலவேர், உத்தாமணிவேர் மிளகருணைவேர் வகைபலம் 1 பசும்பாலிலரைத்து கலக்கி காச்சி வடித்து 3-காசிடையாக 5-நாள் கொடுக்க உப்பு புளிநீக்கவும்.

### நல்ல பாம்புவிஷத்திற்கு வேறு.

வெள்ளருகு இலையை உள்ளுக்குக் கொடுத்தாலும் எருக்கிலை புகலையும் கசக்கி கண் காது நாசியில்நசியம் விடுவதாலும் தும்பை துளசி மிளகு உப்பு வெத்திலை கசக்கி விடுவதாலும் விஷம் நீங்கும் தும்பை ரசத்தில் மிளகு தூளிட்டு கொடுக்கவும்.

விஷநூல் முற்றுப்பெற்றது.



Digitized By Roja Muthiah Research Library



உ

சிவராமஜெயம்.

மூலிகை மர்மமென்னும்

# சாஸ்திரத்திற்கு அநுபந்தம்.

மூலிகை மர்மம் என்னும் நூலில் முழுமையும் பச்சிலைப் பிர போகமே யானபடியால் இதில்சேரவேண்டிய சிலகடைசரக்கு ரச கெந்தபாஷாணாதி முறைகளை பார்வதி பரணியத்தில் பார்த்துக் கொள்ளலாமென்று மேற்படி நூலில் ஆங்காங்கு கண்டிருக்கிறது ஆகையால் மூலிகைமர்மத்தில் இன்னபக்கத்தில் சொல்லிய மு றைக்கு இன்னபாகம் சேர்த்துக்கொள்ள வேணுமென்று இங்கி ருந்து சொல்லப்பட்டு வருகிறது.

மூலிகைமர்மம் 4-வது சயிட்டிற்கூறிய

## பிராண சஞ்சீவி மாத்திரை.

| | |
|---|---|
| சுக்கு | காயம் |
| திப்பிலி | பூண்டு |
| மிளகு | நெல்லிக்காகெந்தகம் |

இவைகள் சமனிடையெடுத்து ஒன்றிரண்டா யிடித்து கலுவ த்தில்போட்டு எலுமிச்சம் பழச்சார்விட்டு இரண்டுநாள் ஊரியபிற கு திரும்பவும் பழச்சார்விட்டு அறைத்து உளுந்துபோலவும் கட லைபோலவும் உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு மூலி கைமர்மம் 4-வது பேஜியில் சொல்லியிருக்கும் வயற்றுக் கடுப்புக் கு மேற்படி மர்மத்தில் சொல்லிய அனுபானத்துடன் கொடுத்தா லும் அல்லது இந்த பிராணசஞ்சீவி மாத்திரையைத் தனியாக வெ ன்னீரிலாவது கொதித்தண்ணியிலாவது சக்கரையிலாவது கொடு த்தால் வயற்றுக்கடுப்பு நிவர்த்தியாகும் பத்தியமில்லை.

மூலிகைமர்மம் 5-வது சயிட்டில் சொல்லிய

முறைக்கு அனுபந்தம்.

## கெற்பமுண்டாக எண்ணை.

| | |
|---|---|
| மிளகு | கஸ்தூரிமஞ்சள் |
| ஓமம் | ஜாதிக்காய் |
| திப்பிலி | வெள்ளைவெண்காயம் |
| இந்துப்பு | கருவண்டு |
| வசம்பு | கருங் கம்பளி |

இவைகள் வகைக்கு 3-கிராகனிடையாக யெடுத்து இடித்து கலுவத்திலிட்டு கொஞ்சம் விளக்கெண்ணைவிட்டு மைபோல் ஆகு மளவும் அறைத்து 25-பலம் விளக்கெண்ணையில் கரைத்து அடுப்

Digitized By Roja Muthiah Research Library

பேற்றி மெழுகுபதமாய்க் காச்சி வடித்து வைத்துக்கொண்டு கெர்ப்பம் இல்லாதபெண்களுக்கு ருதுஸ்நானம் வந்தபிறகு தலைமுழுகின மறுதினம் முதல் பிரதிதினமும் காலையில் ஒரு உச்சிக்கரண்டி வீதம் 15-நாள் கொடுக்கவும். இரண்டாவது தலைமுழுக்கு வந்தபிறகு முன்போலவே 14-நாள் கொடுக்கவும் எண்ணை சாப்பிடும் போது பத்தியம் சுட்டபுளி வருத்த உப்பு சேர்க்கவேண்டியது. கைப்பு புளிப்பு இல்லாதிருந்தால் மிகவும் உத்தமம் மறுமாதம் கெர்ப்பந்தரிக்கும்.

### தாது புஷ்டிக்கு
### மதனசிந்தாமணி லேகியம்.

சுக்கு
திப்பிலி
மிளகு
ஏலம்
கிராம்பு
உளுந்து
எள்ளு
கோஷ்டம்
நெருஞ்சிவிரை
நீர்முள்ளிவிரை
பழுபாகல்விரை
கொத்தமல்லிவிரை
இந்துப்பு
வசம்பு
கடுக்காப்பூ
மதனகாமப்பூ
கிராம்பு
சோம்பு
இலுப்பைப்பூ
தென்னம்பூ
பனம்பூ
நெல்லிக்காய்வற்றல்
தாணிக்காய்தோல்
கடுக்காய்தோல்
வெந்தியம்
இலவம்பிசினி
இலவம்விரை
ஆலம்விரை
அரசம்விரை
அத்திவிரை
ஆவாரம்விரை
ஆளிவிரை
செங்கழுநீர்ப்பூ
லவுங்கப்பட்டை
ஜாதிக்கா
ஜாபத்திரி
சீரகம்
கருஞ்சீரகம்
தண்ணிவிட்டான்கிழங்கு
நிலப்பனைக்கிழங்கு
அமுக்குறாங்கிழங்கு
வாழைக்கிழங்கு
சத்திசாட்டரணை
சிறுகாஞ்சொரி
கொடிமுந்திரி
சீந்தில்
சிறுதேக்கு
குராசானிஓமம்

இவைகள் வகைக்கு 1-பலம் யெடுத்து உலர்த்தியிடித்து வஸ்திரகாயம்செய்து வாய் அகண்ட பெருஞ்சட்டியில் 2-படி பால் 2-படி ஜெலம்விட்டு அடுப்பேற்றி வாய்புரத்திற்கு மெல்லியதுணியினால் யேடுகட்டி மேற்படி சூரணங்களைக் கொட்டி பரவவைத்து மேல்சட்டி கவிழ்த்துமூடி புட்டவியல் செய்யவும் இரண்டுபடிஜெ

Digitized By Roja Muthiah Research Library

லமும் வற்றுமளவும் திபெரித்து சட்டியை யிறங்கி சூரணத்தை யெடுத்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு மூக்கால்படி பசும்பாலை அடுப்பிலிட்டு 15-பலம் சீனிச்சர்க்கரை யிட்டுக் கலந்து பாகுபதமாய்செய்து இரக்கிக்கொண்டு மேற்படி சூரணத்தை சிறுகத்தூவிக் கிளரிக்கொண்டே யிருக்கவும் சூரணங்கள்யாவும் ஆனபிறகு கால்படி தேனில் கால்பலம் அபினியை யிழைத்து அந்ததேனைவிட்டுக் கிளரவும் அல்லது கையினால் நன்றாய் பிசைந்து பீங்கான் கோப்பையில் வைத்துக்கொண்டு ஒருவேளைக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிடவும். இப்படி காலைமாலை யிருவேளையும் 40-நாள் தின்னவேண்டியது.

## இதற்குப் பத்தியம்.

பகற்காலத்தில் புளிப்பு சேர்த்த குழம்பு ரசம் பதார்த்தம்முதலியதும் ஆகும், இராத்திரியில மட்டும பாலும் சாதம் சாப்பிடவேண்டியது. லாகிரிவஸ்துக்கள் கூடாது, ஸ்ரீ சஞ்சாரம்யில்லாதிருந்தால் உத்தமம் தேகம் பலக்கும் தாதுபுஷ்டியுண்டாகும்.

## மதனகாமேசுர லேகியம்.

| | |
|---|---|
| சுக்கு | ஏலம் |
| திப்பிலி | முள்ளிலவம்பிசினி |
| மிளகு | சுத்திசெய்தகெஞ்சா |
| அதிமதுரம் | அமுக்கறாங்கிழங்கு |
| நீர்முள்ளிவித்து | தண்ணிவிட்டான்கிழங்கு |
| நெருஞ்சிவித்து | மருட்கிழங்கு |
| மல்லி | ஆனைத்திப்பிலி |
| கோஷ்டம் | சிறுநாகப்பூ |
| ஜாதிக்காய் | வெந்தியம் |
| உளுந்து | கொடிவேலிவேர் |
| எள்ளு | நெல்லிக்காய் |
| கொடிமுந்திரிப்பழமும் | மாசிக்காய் |
| பேரீச்சங்காய் | தான்றிக்காய் |
| அதிவிடையம் | அபினி |
| கஸ்தூரிமஞ்சள் | சண்பகப்பூ |
| கதலிக்கிழங்கு | பெருஞ்சீரகம் |

இவைகள் வகைக்குப்பலம் (கால்) யெடுத்து உலர்த்தி யிடித்து வஸ்திரகாயம்செய்து இதற்குச் சரியிடை பூனைக்காலி வித்தின் பருப்புச் சூரணம்சேர்த்து வைத்துக்கொண்டு இரண்டுபடி பசும்பாலை அடுப்பிலேற்றி 20-பலம் சீனிபோட்டுக் கலந்து பாகுபதத்தில் இறைக்கி மேற்படி சூரணத்தை கொஞ்ச கொஞ்சமாய் தூவிக் கிளரிக்கொண்டிருக்கவும் யாவும் ஆனபிறகு ஆரவைத்துவே

Digitized By Roja Muthiah Research Library

ண்டியமட்டும் தேன்விட்டு பிசைந்து வைத்துக்கொள்ள வேண்டியது. மேம்படிசூரணம் தூவிக்கிளரும்போது அபிரேக்கு சிந்தூரம் கால்பலம் கூடக்கலந்து தூவவேண்டியது. இந்தலேகியத்தை ஒரு வேளைக்குதேத்தான்கொட்டைப் பிரமாணம் இருவேளையும் சாப்பிடவும் வீரியவிருத்தியுண்டாகும். இந்திரியம் கட்டும் அதிசாரம் கிராணி பித்தசிலேத்துமம் வாய்வு இவையாவுந் தீரும்.

### பத்தியம்.

புளி, நல்லெண்ணை, கடுகு இவை நீக்கி நெய் பால் முருங்கைப்பிஞ்சு இவை கூட்டவும். அபிரேக்கு சிந்தூரத்தை பின்வரும் சிந்தூரம் பற்பத்துடன் சொல்லியிருக்கிறது.

### மதனகாமரசக் குளிகை.

| | |
|---|---|
| பூமிசக்கரைக்கிழங்கு | பூனைக்காலிவித்து |
| நிலப்பனைக்கிழங்கு | முருங்கைவித்து |
| சமுத்திராசோகிவிரை | மூத்தக்காசி |
| சாரப்பருப்பு | கிராம்பு |
| ஜாதிக்கா | வெண்காரம் |
| ஜாபத்திரி | லிங்கம் |
| அபினி | வாலேரசம் |
| கஞ்சா | |

இவ்வைகள் வகைக்குப்பலம் (அரை) இவைகள் யாவும் பொடித்துக்கொண்டு ஒரு முத்தின தேங்காய் கொண்டுவந்து குடுமிமுதலியதும் போக்கி தேங்காயின் கண்கள் மூன்றையும் துவாரம்செய்து ஜலத்தைக் கொட்டிவிட்டு முன் பொடித்திருக்கும் மருந்துகளை உள்ளே செலுத்தி அந்த துவாரத்திற்குத் தகுந்த காரக்கு அடைத்து மேலே ஒரு அங்குலகனம் சாணி தடவியுலர்ந்தபிறகு முழுப்புடமிடவும் சிரட்டை கருகின உடன் யெடுத்து மேல் சிரட்டையை நீக்கிவிட்டு மற்றதைகல்வத்திலிட்டு மெழுகுபோல்அரைத்துக்கொண்டு தேற்றான்விரைப்பிரமாணம் உருட்டி சக்கரையில் பொதிந்து சாப்பிடவும் இப்படி காலே மாலே யிருவேளையும் தின்னவும் இராக்காலத்தில் புளிசேர்ந்த பதார்த்தங்கள் புளிப்பு பழவர்க்கங்கள் புளிப்புமோர்முதலியதும் ஆகாது பால் அன்னம் புசிக்கவேண்டியது பகலில் சுட்ட புளி வருத்த உப்பு கூட்டிக்கொள்ளவும் தாதுபுஷ்டியுண்டாகும் புணர்ந்தால் கட்டுகலேயாது இதற்கு மாற்று எலுமிச்சம்பழம்.

### ஜெகபலக் குளிகை.

| | |
|---|---|
| சிறுபூனைக்காலி | மொசிமுசுக்கை |
| நத்தச்சூரி | அகத்தி |



Digitized By Roja Muthiah Research Library

| | |
|---|---|
| நீர்முள்ளி | தேற்றான் |
| முருங்கை | அழிஞ்சி |
| அமுக்குரு | வில்வம் |
| செம்முள்ளி | நெல்லி |
| நெருஞ்சி | அத்தி |
| ஊமத்து | ஆத்தி |
| ஒரிலைத்தாமரை | அரசு |
| கெஞ்சா | ஆல் |
| ஆவரை | அவுரி |
| முள்ளி | புரசு |
| சங்கு | முசுட்டை |
| சுண்டை | சிவன்வேம்பு |
| திரிபலை | செங்காயுருவி |
| கருவேல் | பாற்கொரண்டி |
| வன்னி | கொன்றை |
| மருது | எள்ளு |
| மாங்கொட்டை | கொத்தமல்லி |
| நிலப்பனைக்கிழங்கு | முருங்கை |
| அமுக்குராக்கிழங்கு | விளா |
| நன்னாரிவேர் | வேலா |
| சமுத்திராப்பழம் | வேம்பு |
| வாகை | இலவு |
| சாதிக்காய் | சீனிகற்கண்டு |
| சாதிபத்திரி | வெள்ளைகுங்குலியம் |
| குரோசாணிஓமம் | மதனப்பூ |
| சற்கரை | அப்ரேக்செந்தூரம் |

இவைகள் யாவத்தும் வகை யொன்றுக்குப்பலம் அரைக்கால் உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து இந்த சூரணத்துடன் அப்பிரச்செந்தூரம் சேர்த்துக்கொண்டு கொடிமுந்திரிப்பழம் சாற்றில் மூன்று நாளரைத்துக் கடலைப்பிரமாணம் உருட்டி வேளையொன்றுக்கு ஒரு குளிகைவீதம் ஆவின்பாலில் ஒரு மண்டலம் கைப்புப் புளிப்பு நீக்கி உட்கொள்ள யானைப்பலம் உண்டாகும் தாதுவிருத்தி விசேஷமுண்டாகும் சுக்கிலங்கட்டும்.

## மதனசஞ்சீவி.

ஒரு படி ஆவின்பாலில் நாலுபங்கு கோதும்பைமாவும் இருபது பலச்சீனியையும் போட்டுக் கிண்டிக் காய்ச்சிப் பாகுபதத்தில் நீர்முள்ளிவிரை, நிலப்பனைக்கிழங்கு, லவுங்கப்பட்டை, பனைவேர் வகைக்குப்பலம் 4 கருவேலன்பிசின், கெஞ்சா வகைக்குப் பலம் 2

Digitized By Roja Muthiah Research Library

சந்தணம் சாதிக்காய், கிராம்பு, பெருஞ்சீரகம்வகைக்கு விராகனி டை 2 திப்பிலிபலம் ௨ இவைகளை யிடித்து சூரணித்துத் துவிசெ ய்படி ௨ விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் இறக்கி ஆத்திபேரீச்சம் பழம். பலம் 4 தேன்பலம் 10 சேர்த்துப் பிசைந்து வேளைபொன் றுக்கு கொட்டைப்பாக்குப்பிரமாணம் சாப்பிட்டுவர விந்து ஊறும் போகம் மிகும்.

## சொர்ன்னபற்பக் குளிகை.

| | |
|---|---|
| அபினி | சாம்பிராணிப்பூ |
| மதனகாமப்பூ | முருங்கைவித்து |
| கிராம்பு | ஆலம்வித்து |
| ஜாதிக்காய் | அரசம்வித்து |
| மராட்டிமொக்கு | அத்திவித்து |
| அதிமதுரம் | தங்கபற்பம் |

இவைகளை ஓர்நிறையாயெடுத்து முருங்கைப்பூவின் சாற்றால் அறைக்கவும் மிகவும் நண்ணிபமைபோல் ஆட்டி சிறுசுண்டையள வு மாத்திரைசெய்துவைத்துக்கொண்டு பசும்பாலில் முருங்கைப்பூ போட்டுக் காச்சிய கால்படி பாலில் ஒரு உருண்டையிழைத்து சா ப்பிடவும் இப்படி இரவில் ஒரே வேளையாக ஒருமண்டலம் சாப்பி டவேண்டியது. உப்புபுளிநீக்கி பத்தியம் பாலும் அன்னமும் தின் னவேண்டியது பெண்மயக்கம், லாகிரி, புகையிலை, இவை நீக்கி யிருந்தால் திரேகம் தங்கமயமாயிருக்கும் திரேகம் பலக்கும் தாது கட்டும் மேற்படிஒருமண்டலம் ஆனபிறகுமனம்போல்நடக்கலாம்.

மேற்கூறிய தங்கபற்பம் பின்வரும் சிந்தூரம் பற்பம்முதலிய வகுப்புகளுடன் சொல்லப்படும்.

## பூரணமதனவல்லாதி.

| | |
|---|---|
| நாயுருவிவித்து | அரசம்வித்து |
| நத்தைச்சூரிவித்து | ஆலம்வித்து |
| பாற்சுண்டிவித்து | அத்திவித்து |
| கஞ்சாவித்து | முருங்கைவித்து |
| துளசிவித்து | நீர்முள்ளிவித்து |
| திருநீற்றுப்பச்சைவித்து | பூனைக்காலிவித்து |
| கருவேலன்வித்து | ஆவாரைவித்து |
| சிறுகீரைவித்து | பொன்னாவாரைவித்து |
| புரசைவித்து | தேற்றான்வித்து |

இவைகள் வகைக்கு களஞ்சு 2.

| | |
|---|---|
| சுக்கு | ஓமம் |
| திப்பிலி | வாலுழுவையரிசி |

Digitized By Roja Muthiah Research Library

| | |
|---|---|
| மிளகு | கோஷ்டம் |
| ஜாதிக்கா | சாரப்பருப்பு |
| ஜாபத்திரி | வால்மிளகு |
| கிராம்பு | மதனகாமப்பூ |
| சோம்பு | சிறுநாகப்பூ |
| கருவாப்பட்டை | சக்கரை |
| ஏலம் | அபினி |

இவைகள் 18 தினுசும் வகைக்கு களஞ்சி 3.

| | | |
|---|---|---|
| எள்ளு | பலம் | 2 |
| பூமிசக்கரைக்கிழங்கு | ,, | 2 |
| சுத்திசெய்தசேங்கொட்டை | ,, | 2 |
| அமுக்கனுக்கிழங்கு | ,, | 1 |
| கொடிமுந்திரிப்பழம் | ,, | 1 |
| பேரீச்சம்பழம் | ,, | 1 |
| சுத்திசெய்த வருத்த கெஞ்சா | ,, | 4 |

இவைகள்யாவும் கல்லுரலில்போட்டு நாலுஜாமம் இடித்து மெல்லிய தூளாக யாவும் கலந்த பிறகு சீனி (5) பலம் கற்கண்டு (25) பலம் சேர்த்து மெழுகுபோல் யிடித்து வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு அரைவிராகனிடைவீதம் பசும்பாலில் சாப்பிடவிந்து கட்டும் சற்றுமயங்கினுல் எலுமிச்சம் பழச்சாறும் ஈருள்ளிச்சாறும் கொஞ்சம் அருந்தினுல் மாறும்.

## மதனப் பால்.

சந்தணம், தேற்றான்விரை, முருங்கைவேர்பட்டை இவைகள் சமனிடையெடுத்து தேங்காய்ப்பாலி லரைத்து வேளைக்குப் புன்னைக்காய் வீதம் உட்கொண்டுவர விந்து கட்டும் வலிவுண்டாகும் புளி நீக்கி பாலன்னமுண்ணவும்.

## இதுவுமது.

முருங்கைப்பூ நெருஞ்சிப்பூ இளந்தென்னம்பாளை யுள்ளிருக்கும் அரிசி இவை சமன் கொண்டு பால்விட்டரைத்துப் பாலில் காச்சியுண்டுவர தாதுவிருத்தியுண்டாம்.

மூலிகைமர்மம் 9-வது சயிட்டில் சொல்லியிருக்கும்

## சஞ்சீவிமூலிகையென்னும்

## அழுகண்ணிச் செடியின் விபரம்.

இந்துஸ்தானி பாஷையில் (ஙாதந்தியிலே) என்னும் அழுகண்ணியிலையானது கட்லையிலேபோல்சிறிதாயும் வழுவழுப்புள்ளதாயும் நற்புறம் பூமியைநோக்கியும்பிற்புறம் ஆகாசத்தை நோக்கியுமிரு

Digitized By Roja Muthiah Research Library

க்கும் அதில்நின்று ஜலமொழுகுவதைப்போல் தோற்றும் இதுநல்ல ருசியையுடையதாகவும் கொஞ்சம் உப்புக்கரித்துமிருக்கும் இந்தச்செடி யிருக்கும் பூமி கசிவாய்க்கருத்திருக்கும் எறும்புகளைப்போது மொய்த்துக்கொண்டிருக்கும் உவர் நிலத்தில் முளைக்கும் இதிலிரண்டு ஜாதியுண்டு அதிலொன்று ஒருமுழ உயரமும்மற்றொன்று ஒருசாணுயரமு மிருக்கும்.

மூலிகைமர்மம் 14-வது சயிட்டில்சொல்லிய
சர்வசுரக்கிஷாயத்திற்கு அனுபந்தம்.

### சர்வசுரக் குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கெந்தகம் | விராகனிடை | 1 | சுக்கு | விராகனிடை | 4 |
| இரசம் | ,, | 1 | திப்பிலி | ,, | 4 |
| நாபி | ,, | 1 | மிளகு | ,, | 4 |
| ஊமத்தன்விரை | ,, | 3 | (பழச்சாறு) | | |

இவைகள் கலுவத்திலிட்டு எலுமிச்சம் பழச்சார்விட்டு 3-ஜாமமட்டும் அறைத்து மிளகளவு மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு பித்தசுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும் வாதசுரத்திற்கு முருங்கப்பட்டை சாற்றிலும் கொடுக்கவும் குளிர்சுரத்திற்கு இஞ்சிபூண்டு முருங்கைப்பட்டை இம்மூன்றும் யிடித்து சாறுவாங்கி சுரசம் செய்து முரித்ததேன் முலைப்பாலில் கொஞ்சம்விட்டு இரண்டுமாத்திரைகள் யிழைத்துக் கொடுக்கவும்.

### இதற்குக் கிஷாயம்.

பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, பற்பாடகம், சீந்தில், சுக்கு, இவை சமன்கொண்டு யிடித்து எட்டொன்றுக கிஷாயம் வைத்து கொடுக்கவும் அல்லது மூலிகைமர்மம் 14-வது சயிட்டில் சொல்லியிருக்கும் கியாழம் கொடுக்கவும் காலை மாலை மாத்திரை கொடுத்தபிறகு இந்த கிஷாயம் கொடுக்கவேண்டியது.

### பத்தியம்.

அசாத்திய சுரமானல் கோதுமை நொய்யை வருத்து ஜலம்விட்டு கஞ்சிகாச்சி வருத்த உப்புபோட்டுக் கொடுக்கவும் புளிப்புகூடாது சற்று லகுவான சுரமானல் சுட்டபுளி வறுத்தஉப்பு கத்திரி, முருங்கை, அவரை, இதுகளின் பிஞ்சு கூட்டவும் சுரம்விட்டபிறகு 3-நாள் பார்த்து காச்சிய எண்ணெயினல் தலைக்கு வார்க்கவும்.

இந்த மாத்திரையை தலைவலி, உடம்பு அனல், கைகால் அசதி இப்படியுள்ளவர்கள் இரண்டு மாத்திரையெடுத்து ஒருவெற்றிலையில் வைத்து மடித்துத்தின்னவும் இப்படி இருவேளையும் தின்னவும் பத்தியமில்லை மிளகுநீர் சாதம் கச்சைக்கருவாடு காரைப்பொடிசுரா, இதுகள் குழம்பு சாப்பிடலாம்,

ROJA MUTHIAH
47, HOSPITAL ROAD
KOTTAIYUR-623 106
P. M. DIST-INDIA
Digitized By Roja Muthiah Research Library

### ஜன்னி சீதளம் முதலானதற்கு

## ஆனந்தவயிரவ மாத்திரை.

| | |
|---|---|
| நாபிக்கிழங்கு | மனோசிலை |
| இரசம் | லிங்கம் |
| கெந்தகம் | வெண்காரம் |

இவைகள் ஆறுதினுசும் சமனிடையெடுத்து கலுவத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் 4-ஜாமம் அரைத்து சிறு பயறளவுமாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி சீசாவில்போட்டு வைத்துக் கொள்ளவும்.

### இதற்கனுபானம்.

ஜன்னிக்குமுலைப்பாலில் முருங்கைப்பட்டைசுசரம் இதுகளில் இரண்டுமூன்றுவேளைகொடுக்கவும் குளிர்சுரத்திற்கு இஞ்சிபூண்டு இதுகள் நசுக்கி சாறுவாங்கி சுரசம்செய்து அதில் இரண்டு மாத்திரையிழைத்து முறித்ததேன் முலைப்பால் இதுகள்கொஞ்சம்விட்டுக் கொடுக்கவும் இப்படி 2-3 வேளை கொடுக்க நிவர்த்தியாகும் இச்சாபத்தியம் கோதுமைக்கஞ்சி பார்லி அரிசிக்கஞ்சி, கர்பி, பில்கோத்து இதுகளும் கொடுக்கலாம்.

### மூலிகைமர்மம் 17-வது சயிட்டில்சொல்லிய கண்ணொளிவு சிகிச்சைக்கு அனுபந்தம்.

## நேத்திரரோகம் கூசு-க்கும் தைலம்.

| | | |
|---|---|---|
| தாழம்விழுதுச்சாறு | படி | வ |
| நெல்லிக்காய்சாறு | ,, | வ |
| கரிசலாங்கண்ணிச்சாறு | ,, | வ |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | வ |
| பசம்பால் | ,, | வ |
| இளநீர் | ,, | வ |
| சீந்தில்சாறு | ,, | வ |
| நல்லெண்ணை | ,, | உ |

இவையாவும் ஒன்றாய்க் கலந்து அடுப்பேற்றி

| | |
|---|---|
| இலுப்பைப்பூ | நாகேசுரம் |
| சந்தனம் | வெட்டிவேர் |
| அதிமதுரம் | கோரைக்கிழங்கு |
| ஏலம் | ஜாதிக்காய் |
| லவுங்கம் | தேவதாரம் |
| லவங்கப்பத்திரி | விலாமிச்சம்வேர் |
| தாமரைக்கிழங்கு | ஆலம்விழுது |

Digitized By Roja Muthiah Research Library

| | |
|---|---|
| வெட்டிவேர் | செங்கழுநீர்க்கிழங்கு |
| வில்வப்பழச்சதை | கீழாநெல்லிவேர் |

இவைகள் வகைக்குப்பலம்(கால்)யெடுத்து பசும்பால் விட்டரைத்துப்போட்டுக் கலக்கி காச்சவேண்டியது மெழுகுபதமாய்க்காச்சி வடித்து வாரத்திற் கிருவிசை தலைமுழுகிக்கொண்டு வந்தால் நேத்திரரோகம் யாவும் தீரும். அன்றுபகல் நித்திரையும் வெய்யலில் திரிச்சலும் கூடாது வேரேபத்தியமிலையாது.

## குளிர்ச்சிக்கி வேறுவிதத் தைலம்.

| | | |
|---|---|---|
| வில்வப்பழச்சதை | பலம் | 2 |
| வெந்தியம் | ,, | 2 |
| கார்கோலரிசி | ,, | 2 |

இவைகளை பசும்பால் விட்டு மைபோல் அறைத்து 40-பலம் நல்லெண்ணெயிற் போட்டுக் கரைத்து பதமாய்க்காச்சி முழுகிவந்தால் உடம்பும் கண்களும் குளிர்ச்சியுண்டாகும் சகலமான சூடும் தணியும்.

மேற்படி நேத்திர ரோகத்தைப்பற்றிய தைல முறையானது இவ்விடத்தில் இரண்டுபாகம் சொல்லப்பட்டிருக்கிறது ஆகையால், இந்த நேத்திர ரோகத்திற்குரிய பாகங்கள் ஆதியோடந்தமாக 96-வியாதியின் குணமும், அடையாளமும், அவைகளுக்கும் பலவித சிகிச்சைகள் முழுமையும் விபரமாய்ப் பார்க்கவேண்டியவர்கள் (திருநேத்திரசிந்தாமணி) என்னும் சாஸ்திரத்தில் பார்வையிடலாம். உயர்ந்த கடிதத்தில் சுத்தமாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

மூலிகைமர்மம் 17-வது சயிட்டில் கூரியதற்குரிய

சகலமாந்தத்திற்கும்

## பாலசஞ்சீவிக் குளிகை.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்தவாளம் | விராகனிடை | 8 |
| சுக்கு | ,, | 7 |
| மிளகு | ,, | 6 |
| நெல்லிக்காய்கெந்தி | ,, | 2 |
| வெண்காரம் | ,, | 2 |
| இரசம் | ,, | 2 |
| கடுகுருணி | ,, | 2 |

இவைகளை மேற்கூறிய நிறைப்படி நிறுத்துக்கலுவத்திலிட்டு இலைக்கள்ளிச்சாற்றால்மெழுகுபோல் அறைத்து மிள்காவு மாத்தி

Digitized By Roja Muthiah Research Library

ரைகள் செய்து நிழலில்உலர்த்தி வைத்துக்கொள்ளவும். இந்தமாத்திரையை சகலமாந்தத்திற்கும் உபயோகிக்கலாம். நொச்சில், ஆடாதோடை, துளசி, கரசலாங்கண்ணி, கம்மாறுவெற்றிலை இதுகளை வகைக்குக் கொஞ்சம்யெடுத்து சட்டியிலிட்டுவதைக்கி சாறுபிழிந்து அந்தசாற்றில் 1-அல்லது 2-மாததிரைகள் இழைத்து வார்க்கவும் காலையில் வதைக்கிப் பிழிந்துக் கொண்ட மூலிகைத்திப்பியை வைத்திருந்து மாலையில் சட்டியிலிட்டு சாம்பலாகுமளவும் தீயெரித்து பஸ்பமான பிறகு அத்துடன் கருஞ்சீரகம் போட்டு நன்றாய் பொரிந்து அடங்கியபிறகு அத்துடன் கொஞ்சல் மிளகுபோட்டு கொஞ்சம் சக்குரரிக்கிப்போட்டு ஜலம்விட்டு நாலுக்கொன்றாய் கியாழமிட்டு 2-சங்களவுவார்க்கவும் இப்படி 2,3, நாள்வார்க்க சகலமான மாந்தமும் தீரும்.

மாந்தவியாதியினால் ரொம்பவும் இளைத்து சக்தியற்ற குழந்தைகளுக்கு காலையில் இரண்டு மாத்திரை யெடுத்துப் பொடித்து ஒரு சங்கு நல்ல ஜலத்தில் கலந்து வார்த்துவிடவும் 1-அல்லது 2-விசை மலப்பிரவிர்த்தியாகும் சுரம், அள்ளு, வயர் உப்புசம் முதலானதும் கண்டிக்கும் மாலையில் கருஞ்சீரகம் ஓமம் சாம்பலாக்கி அதற்குமேல் மிளகு கொஞ்சம் போட்டுக் கடலையிட்டுக் கொண்டு அதற்குமேல்கொஞ்சம் சுக்குநருக்கிப்போட்டு தண்ணீர்விட்டு நாலுக்கொன்றாய் கிஷாயம்வைத்து 2-சங்கு வார்க்கவும் இதற்குத்தாயார் பத்தியமிருக்கவேண்டியது; அதாவது வாய்வான் பதார்த்தம் தள்ளி மற்றதெல்லாம் ஆகும்.

## பிள்ளைகள்கொருகொருப்புக்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| பரப்பாரமுள்ளிப்பூவின்யிதழ் | கால் | துலாம் |
| ஓமப்பூ | அரிக்கால் | துலாம் |
| கோரோஜனம் | அரிக்கால் | துலாம் |
| கஸ்தூரி | ஒருகுண்டுமணி | |
| பூசாம்பரம் | கால் | துலாம் |
| குங்குமப்பூ | 5-குண்டுமணி | |

இதுகளை பச்சைத்தண்ணீர் விட்டரைத்து கம்பு அல்லதுபயறுப்பிரமாணம் உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு பிள்ளைகள் நெஞ்சில் கபங்கட்டிக்கொண்டு கொருகொருப்புண்டானால் இந்தமாத்திரை கொடுக்கவும்.

இரவில் படுக்கும்போது குழந்தைகள் திடம் அறிந்து 1-அல்லது 2-மாத்திரை யெடுத்து முலைப்பாலில் இழைத்துக்கொடுக்கவும் இப்படி 2-நாள்கொடுத்தால் கொருகொருப்பு வயர்சுரப்பு யிருமல் இவைதீரும் இரவில் கொடுத்தால பத்திய மிருக்கவேண்டிய அவசியமில்லை.

Digitized By Roja Muthiah Research Library

பிள்ளைகளுக்கு இதேப்பிரகாரம் முலைப்பாலில்இழைத்து காலையில் கொடுத்தால் பத்தியம் இருக்கவேண்டியது. மீன், கருவாடு கெரி இதுகள் ஆகாது இச்சாபத்தியம் இருக்கவேண்டும்.

பெரியவர்களுக்கு மார்சளி, ஜலுப்பு, சீதளம், இதுகளுண்டானல் இரண்டு மாத்திரை யெடுத்து வெற்றிலையில் வைத்து மடித்துத்தின்னவும் இச்சாபத்தியம் 2-3 வேளை தின்னவும்.

## பிள்ளைகள் அள்ளுமாந்தத்திற்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| முலைப்பாலில் 1-நாள் ஊரவைத்தெடுத்த ரசச்செந்தூரம் | துலாம் | க |
| சயிந்து லவணம் | ,, | க |
| திப்பிலி | ,, | க |
| சுக்கு | ,, | க |
| மாசிக்காய் | ,, | உ |
| சுத்திசெய்தவாளம் | ,, | உ |
| கோரோஜனம் | ,, | உ |
| குங்குமப்பூ | ,, | உ |
| கஸ்தூரி | 3 குண்டுமணியிடை | |

இவைகள் யாவும் மேற்கூறிய நிரைப்படி நிருத்தெடுத்து கல்வத்திலிட்டு குப்பைமேனிச்சார்விட்டு இரண்டுநாள் அறைத்து பயறுப்பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திவைத்துக்கொள்ளவும்.

### இதற்கனுபானம்.

பெரண்டைச்சாற்றிலாவது துளசிச்சாற்றிலாவது குப்பைமேனிச்சாற்றிலாவது கொடுக்கலாம் 1-அல்லது 2 மாத்திரையிழைத்துக் கொடுக்கவும் வயர்உப்பிஷம், மேல்சுவாசம், அள்ளுமாந்தம் முக்கல் முதலிய வியாதிகள் தீரும். இதற்குப்பத்தியம் வருத்தஉப்பு சுட்டபுளி கூட்டவேண்டியது அவரவர்கள் குழந்தையின் திடம் அரிந்து வழக்கம்போல் பத்தியமிருக்கவேண்டியதுதாய்மார்களின் கடமையாம்.

மூலிகைமர்மம் 20 வது சயிட்டிலகூறிய புறவீச்சுக்கு

### சிவநாதத்தைலம்.

| | |
|---|---|
| இரசம் | மிளகு |
| கெந்தகம் | சேங்கொட்டை |
| வெள்ளுள்ளி | வகைக்கு (கால்) பலம் |

இவைகளை கலுவத்திலிட்டு பசும்வெண்ணை போட்டைரைத்து துணியில் ஊட்டி வத்திபோல்திரித்து இரும்புக்கம்பியில் கோர்த்து தீயிற்கொளுத்தி சாய்த்துப்பிடிக்கத் தயிலமிரங்கும் அந்தநபி



Digitized By Roja Muthiah Research Library

லத்தை பீங்கானில் விழும்படி பிடித்துக்கொண்டு அதையெடுத்து சீசாவில் பதனம்பண்ணி வைத்துக் கொள்ளவும் பிறபிசுவு அல்ல துபுரங்கழுத்து வலிப்பு நரம்பிழுப்பு இதுகளுக்கு ஒருகாசுயிடை தயிலத்தை வெற்றிலையில்விட்டு உள்ளுக்குக் கொடுத்துவிட்டு மே லுக்கும் பூசித்தேய்க்க நிவர்த்தியாக்கும் பத்தியம் கிடையாது.

## புறவீச்சுக்கு வேறு.

இஞ்சிச்சாறு, மூலைப்பால், தேன் இவைகளைச் சமமாய்க்கல ந்து மேற்படி வியாதிகண்டவுடன் உள்ளுக்குக் கொடுக்கவும். மி ஞ்சினால் வேப்பெண்ணையாவதுமுன்சொல்லிய தயிலமாவதுகொ ஞ்சம் விட்டுக் கொடுக்கவும் தீரும்.

அல்லது மேற்படி சேங்கொட்டை சேர்ந்த சுடர் தயிலத்தை ஒருகாசுயிடை உள்ளுக்குக் கொடுத்தவுடன் எருக்கம் யிலையைக் கொண்டுவந்து வேப்பெண்ணைதடவி படைநெருப்பிலிட்டு வதை க்கி புரங்கழுத்தின்மேலிட்டு சூடுரைக்கும்படி அழுத்தமாய் ஒத்தி டம் செய்யத்தீரும்.

சன்னியைச் சேர்ந்த

## தீராத தலைவலிக்கு புகை.

பெருங்காயம், ஓமம், சுக்கு, சாம்பிராணி, மிளகு, சித்தரத் தை, கழற்சிப்பருப்பு, சீரகம், லிங்கம், இவைகள் சமனிடையெடு த்து எருக்கம் பால்விட்டு மைபோல் அறைத்து சீலையில் தடவி தி ரியாகத்திரித்து உலர்த்தி யெடுத்து ஒரு முனையைத் தீயிற்காட்டி அந்த புகைபிடிக்கவும் இந்த புகையை இரவில் போஜனம்செய்து படுக்கும்போது தேகதிடமிருந்து 1 அல்லது 2-3 நிமிஷம் வரையி ல் நாசியில் புகைபிடித்து பிறகு நித்திரை செய்யவேண்டியது இத் துடன் மறுதினம் இரவில் படுக்கும்போதுபிடிக்கவேண்டியது இ ப்படி இரண்டு மூன்று நாள்பிடித்தால் தீராத தலைபாரம் பிரவலி இதுகள் தீரும் சீதளபதார்த்தம் ஆகாது சம்போகம் ஆகாது வே றுபத்தியமில்லை.

மூலிகைமர்மம் 38-வது சயிட்டில் சொல்லிய

## சர்வசூட்டுக்கும் கூழ்பாண்ட லேகியம்.

இரண்டுபடி பசும்பாலில் இருபதுபலம் சீனிபோட்டுக் கரை த்துப் பாகுசெய்து அதில் பெரும்பூசினிக்காயை மேற்றோல்சீவிந ருக்கி உலர்த்தி யிடித்து வடிகட்டினபொடிபடி 1, கோஷ்டம் லவு ங்கம், கஸ்தூரிமஞ்சள், இந்துப்பு, திரிபலை, மதுரம், ஜாதிபத்திரி, திரிகடுகு வகைக்குப்பலம் அரைக்கால் சூரணித்து யாவுங் கலந்து தூவி அரைப்படி நெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிரக்கிவேளை யொன்றுக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிடவும் வர ட்சி எலும்புருக்கி, சிரங்கு, நீர்கடுப்பு, கல்லடைப்பு, வெட்டைதீ ரும் தேகம் குளிர்ச்சியடையும் கைகண்டது.

Digitized By Roja Muthiah Research Library

சர்வசூடு, தேகஊரல், நமை முதலியதற்கு

## சாமிநாத எண்ணெ

சித்தாமணக்கெண்ணெ சேர் 1, எலுமிச்சம்பழச்சார் சேர் 1, பூந்திப்பட்டை பலம் 1, கழச்சிபருப்பு 3 இவைகளை அரைத்தெண்ணெயிற் கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி யிறக்கிக்கொண்டு இந்த யெண்ணெயினால் பேதிக்குச் சாப்பிட்டுவிட்டு மறுநாள்முதல் கொஞ்சங் கொஞ்சமாய் 10-நாள் சாப்பிட்டுக்கொண்டு வந்தால் ஊரல் நமை சூடு சொஸ்தமாகும் இச்சாபத்தியம் இராஜவயித்தியசிந்தாமணி முறை.

சகலவாய்வும் கண்டித்து குளிர்ச்சியுண்டாக

## அமிர்தாதிச் சூரணம்

| | |
|---|---|
| ஏலம் | மஞ்சிட்டி |
| லவுங்கம் | கடுகுறுணி |
| அதிமதுரம் | திப்பிலிமூலம் |
| நற்சீரகம் | ஜாதிக்காய் |
| கருஞ்சீரகம் | கிராம்பு |
| மகரப்பூ | வசுவாசி |
| குராசாணிஓமம் | சிற்றரத்தை |
| வால்மிளகு | சித்திரமூலம் |
| திப்பிலி | நிலவாகை |
| வாய்விளங்கம் | நிலவேம்பு |
| ஜடாமாஞ்சி | குங்குமப்பூ |

இவைகள் வகைக்குச் சமனிடையெடுத்து யிடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து இதற்குச் சரியிடை சீனிகூட்டி வேளைக்குத் திருகடிப்பிரமாணம் சாப்பிட்டு கொஞ்சம் வெந்நீர் குடிக்கவும் இப்படி மண்டலக்கணக்காய் தின்றுவந்தால் கை கால் உளைச்சல் உள்ளுருக்கி யெலும்புருக்கி பிரமியம் கரப்பான் மூலம்வாதம் பித்தம் ஊஷ்ணவாய்வு முதலிய சகலவாய்வும் தீர்ந்து நல்லபசி தீபனமுண்டாகும் தேக குளிர்ச்சி யுண்டாகும் இதற்கு இச்சாபத்தியம்.

புழுவெட்டினால் மயிர் உதிர்வதற்கு மருந்து.

பொரித்த வெண்காரம் 1-விராகனிடையை வெண்கலத்தட்டில்வைத்து அதின்மேரில் கரசனாங்கண்ணிச் சார்விட்டு யிரும்பினால் 3-நாழிகை இழைத்து பிறகு வெண்ணெசேர்த்து சங்கினால் 3-நாழிகை அறைத்து வழித்து டப்பியில் வைத்துக்கொள்ளவும் புழுவெட்டினால் மயிர் உதிரும யிடத்தில் இந்தமையை 5-நாள் தடவினால் மறுபடியும் மயிர் முளைக்கும்.

Digitized By Roja Muthiah Research Library

## விரைவீக்கத்திற்கு மெழுகு.

கெச்சக்காய்ப்பருப்பு வெள்ளைக்குண்டுமணி.மொடக்கொத்தான், பெருக்கம்விரை, காட்டுக்கொள்ளு இவை சமனிடைசேர்த்துக் கல்லுரலில்போட்டுயிடித்து பிறகு கலுவத்தில்போட்டுக்கொண்டு ஆமணக்கெண்ணை விட்டு மெழுகுபோல் அறைத்து கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஒருவேளைக்கு சாப்பிடவும் விரைவீக்கம் அண்டவாய்வு தீரும், பத்தியம் உப்பு தள்ளுபடி வீக்கம் அதிகமாயிருந்தால் ஒட்டைலத்தி கெச்சக்காயிலை இரண்டையும் வருத்திடித்து விரைக்கு ஒத்திடம் கொடுத்தால் அனுகூலமாகும்.

## வாந்திபேதிக்கு மாத்திரை.

மிளகு பெருங்காயம் அபினி (காலேவீசம்பலம்) இவைகளைச்சேர்த்து மைபோலரைத்து (12) மாத்திரைகளாகச் செய்துக்கொண்டு அறைமணிக் கொருதரம் வாந்திபேதி நிற்கிறவரையில் கொடுக்கவேண்டியது (7) முதல் (14) வயதுள்ளவர்களுக்கு பாதி மாத்திரையாகக் கொடுக்கவேண்டியது இந்த மாத்திரை வங்காள தேசத்தில் மிகவும் அனுபோகமானதாக ட்றஸ்ஸர் ஜெகநாத நாயகரால் சொல்லபபட்டது.

## இரத்த அதிசாரத்திர்க்கு.

பெருமரப்பட்டை பலம்-1 மாதுளைச்சாறு வாழைப்பூச்சாறு தென்னம்பூச்சாறு வகைக்கு வீசம்படி இந்த சாற்றால் மேற்படி மருந்தை அறைத்து ஒன்றாய்க்கலக்கி 5-நாள் உட்கொண்டால் இரத்த அதிசாரம் பேதி தீரும்.

## சேதுபண்டிதர் தாம்பிராதிமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சங்கு | விராகனிடை | 6 | துத்தம் | விராகனிடை | 5 |
| தாம்பிற அறப்பொடி | ,, | 12 | கடுகுரோகணி | ,, | 6 |
| சுக்கு | ,, | 1 | கோஷ்டம் | ,, | 5 |
| திப்பிலி | ,, | 10 | இந்துப்பு | ,, | 5 |
| அதிமதுரம் | ,, | 12 | | | |

இவையிடித்து வஸ்திரகாயம்செய்து பழச்சார் விட்டரைத்து அந்த மருந்தை செப்புப்பாத்திரத்தில் தடவிவைத்து மறுநாள் வழித்தெடுத்து முன்போல் அரைத்து மேற்படி பாத்திரத்தில் தடவிவைத்து மறுபடியும் வழித்தரைத்து தடவிவைக்கவும் இப்படி 21-நாள் செய்து பிறகு மிளகுபோல் மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு தண்ணியில் யிழைத்து கண்ணில் தடவினல் தூர்மிசவளர்த்தி, நீர்முட்டல், காசம்படலம், அமரம், திமிரம், இவைசொஸ்தமாகும்.



Digitized By Roja Muthiah Research Library



உ

சிவராமஜெயம்.

# பற்பசிந்தூர வருப்பு.

முன்சொல்லிய லேகியங்களுடன் சேர்க்கவேண்டிய செந்தூரங்களும் அத்துடன் சில பற்பங்களும் கூறப்படுகிறது.

## தங்க பற்பம்.

தங்கரேக்கு ஒரு விராகனிடை கொண்டுவந்து சிறுபொடியாகக் கத்தரித்து கலுவத்திலிட்டு சித்தண்டத்தோல் இரண்டு விராகனிடை பொடித்துப்போட்டு முள்ளுக்கீரைச்சாற்றால் ஒருஜாமம் அரைத்து மூசையிலிட்டுமேலோடுமூடி சீலைசெய்துகாய்ந்தபிறகு உலையிலிட்டு மூசை பழுக்கும்படி மூன்று விசை ஊதி அப்படியே உலையுடன் விட்டு மறுநாள் வரையிலும் ஆரிய பிறகு யெடுத்து சீசாவில் போட்டு வைத்துக்கொள்ளவும் பூரணதிமுதலிய லேகியங்களில் சம்பந்தப்படுத்தி அருந்தி வந்தால் தேகம் தங்க நிறமாயிருக்கும் இச்சாபத்தியம் நல்ல பசியும் தாதுபுஷ்டியும் உண்டாகும்.

## வெள்ளிபற்பம்.

மேற்படி தங்கபற்பம் செய்யும் பாகத்தைப்போலவே வெள்ளியையும் செய்து எடுத்துப்பார்க்கவும் கம்மலாயிருந்தால் அண்டத்துள் வெள்ளைக் கருவாலாட்டி பில்லைதட்டி 50-வரட்டியில் புடம்போட்டு மறுதினம் யெடுத்துக்கொள்ளவும் திருகடுகு திருபலாதி சமன்கொண்டு சூரணித்து ஒரு விராகனிடை சூரணத்திற்கு இரண்டரிசி பற்பம் சேர்த்து அரைதொலா நெய்விட்டிழைத்து சாப்பிடவும் சகலவாய்வும் கண்டிக்கும் தேகம் யிருகும் நல்ல பலமுண்டாகும் இந்த பற்பத்தை உயர்ந்த லேகியங்களுடனும் சேர்த்து சாப்பிடலாம்.

## பவளச் சுன்னம்.

பவளத்தைப் பழச்சாற்றில் ஒருநாள் ஊரவைத்து மறுநாள் கழுகி உலர்த்திக் கலசத்திலிட்டு எருக்கம்பால் மிதக்கவிட்டு ரவியில் வைக்க மெழுகாகும் உடனே எடுத்து ஒரு ஓட்டில் எருக்கம் பழுப்பு பறப்பி அதின்மேல் பவளத்தைவைத்து மேலும் எருக்கம்

Digitized By Roja Muthiah Research Library

பழுப்பு பறப்பி ஓடுமூடி சீலைசெய்து முழப்புடம்போடக் கடுங்கா ரச்சுன்னமாகும் வெற்றிலையில் தடவிப்போட்டுக்கொள்ளலாம் சய ரோகிகள் தாம்பூலத்தில் தடவிப்போட்டுவர நிவர்த்தி ஆகும்.

அபிரேக்கு செந்தூரம்,

கிருஷ்ண அபிரேக்குபலம் 1, அன்னபேதி பலம் 1, வெடியுப்பு பலம் 1, எலுமிச்சம்பழச்சார்விட்டு 3-நாள் அறைத்து பில்லை தட்டி கலசத்தில் வைத்துமூடிச் சீலைவலுவாய்ச்செய்து 20, வரட்டியில் புடமிடவும் சகல வியாதிக்கும் ஆகும்.

முன்கூறிய லேகியத்திற்கு சேரவேண்டிய கணக்குப்படிக்கலந்து சாப்பிடவும்.

அயச்சேந்தூரம்.

அயம்ராவினபொடி 3-நாள் பழச்சாற்றில் ஊரவைத்து நாலாநாள் ஜலத்தில் அலம்பிவிட்டு குப்பைமேனி ரசம்விட்டு அறைத்து பில்லைதட்டிக் காயவைத்து 25-வரட்டியில் புடம்போடவும் மறுபடியும் பழச்சாற்றில் ஒரு புடம் கரசணங்கண்ணிச்சாற்றில் ஒரு புடம் குப்பைமேனிச்சாற்றில் ஒருபுடம் மறுபடியுங்குப்பைமேனிச் சாற்றில் ஒரு புடம் இந்த ஐந்து புடமும் போட்டுயெடுத்து வைத்துக்கொள்ளவும் இளைத்த தேகங்களுக்கும் சில லேகியங்களிலும் கலந்துக்கொடுக்கலாம் இளைத்தவன் யிரும்பைத்தின்னவேணுமென்ற பழமொழியுண்டு.

அன்னபேதி சிந்தூரம்.

2-பலம் அன்னபேதியை கல்வத்திலிட்டு பழச்சாற்றை மிதக்கவிட்டு மேலோடுமூடி சீலைசெய்து முழப்புடத்திலிட்டு ஆரியபிறகு கலுவத்திலிட்டு சீசாவில் வைத்துக்கொள்ளவும் சகலசுரத்திற்கும் தேன்முலைப்பாலில் கொடுக்கலாம் இச்சாபத்தியம்.

வெள்வங்க பற்பம்.

ஒருபலம் வெள்வங்கத்தை உருக்கி விளக்கெண்ணையில் சாய்க்க சுத்தியாய் அதன்பிறகு அதை ஈசலிரகுபோல் தகடடித்துபொடியாகக் கத்தரித்து பூவரசம்வேறுகனமாகக்கொண்டுவந்து அந்த வேரை ஒருபக்கம் துளைத்து மேற்படி பொடியைப்போட்டு துளை தெரியாமல் அதே வேரினல் தமர்போட்டு 2-3, மண்சீலைசெய்து கெஜபுடம்போட்டு மூன்றுவதுநாள் யெடுத்து சீலையை தட்டி

உடைத்துப்பார்க்க பற்பமாயிருக்கும் அதை யெடுத்துச் சீசாவில் போட்டு வைத்துக்கொள்ளவும்.

## இதற்கனுபானம்.

| | |
|---|---|
| சுக்கு | தாணிக்காய் |
| திப்பிலி | மாசிக்காய் |
| மிளகு | நெல்லிக்காய் |

இவையாறும் சமனிடைகொண்டு யிடித்து சூரணித்து வஸ்திரகாயம்செய்து ஒரு விராகனிடை சூரணத்திற்கு இரண்டுகுண்டு மணியிடை மேற்படி பஸ்பம் வைத்து அதை ரூபாயிடை பசும்நெய்விட்டுக் குழைத்துச்சாப்பிடவும் இப்படி 7 நாள் அல்லது 10 நாள் சாப்பிடவும் சூடுவெள்ளை பிரமேகம் வாய்வு இதுகள் தீரும் இச்சாபத்தியம்.

## கருமேகத்திற்கு.

கருமேகத்திற்கு மேற்படி பஸ்பத்தை இரண்டுகுன்றி எடுத்து அரைரூபாயிடை பசும்வெண்ணெயிற் குழைத்து சாப்பிடவும் இப்படி இருபதுநாள் சாப்பிட்டு சரியான பத்தியமிருக்கில் கருமேகம் தீரும்.

## கருமேகத்திற்கு கெந்தக பற்பம்.

ஒருபலம் நெல்லிக்காய் கெந்தகம் கொண்டுவந்து மருதம்பட்டைவேண்டியது கொண்டுவந்து கொளுத்தி சாம்பலாக்கி ஒருபடி ஜலம் பிடிக்கும் மண்கலத்தில் அரைக்குடுவை மேற்படி சாம்பல்கொட்டி நன்றாய் அழுத்தி கெந்தகத்தை நடுவில்வைத்து மேலும்சாம்பல்போட்டு அழுத்தமாக அழுத்தி உதடுமட்டும் சாம்பல் அழுத்தி வாய்புரத்திற்கு ஓடுமூடி அடுப்பேற்றித் தீயெரிக்கவும் கலயத்தின் உதட்டைத்தொட்டால் சூடானதுகை தாங்காத சமயமட்டில் யெரித்து யிரக்கிவைத்து அப்படியே ஆரியபிறகு சாம்பலை நீக்கி கெந்தகத்தையெடுத்து குப்பைமேனியிலையை அரைத்து தேங்காய்ப்பிரமாண முத்தைக்குள் கெந்தியைவைத்து 3 சீலைசெய்து முக்கால் செஜபுடமிட்டு அப்படியே ஆரியபிறகு யெடுக்க பற்பமாகும் நெய்யில் தேனில் வெண்ணெயில் யெதிலாவது அரிசியிடை பற்பம்வைத்துக் கொடுக்கவும் இப்படி அரைமண்டலம் கொடுக்க கருமேகம் தேகஊரல் இவைதீரும் இச்சாபத்தியம்.

Digitized By Roja Muthiah Research Library

## இதற்கனுபானம்.

முன்சொல்லியபடி அறைமண்டலம் மருந்து சாப்பிட்டு இச்சாபத்தியமிருந்த பிறகு ஸ்நான்ம்செய்துவிட்டு அகத்திக்கீரைவேர் பிடித்து தூளாக்கி ஒருபிடியெடுத்து படிஜலத்தில் போட்டு கால்படி கியாழமாகக் காச்சி யிரக்கி இருவேளையாக பாகித்துச் சாப்பிடவும் இப்படி 20 நாள் சாப்பிட்டால் மேகஊரல் கருமேகம் தீரும் இந்த யிருபது நாளைக்குள் தலைமுழுக்கக்கூடாது உடம்புமட்டில் குளிக்கலாம் இச்சாபத்தியம்.

## பவள பற்பம்.

ஒருபலம் பவளத்தை ஒருநாள் தண்ணீரில் ஊரவைத்துக் கழுவிப்போட்டு தேள்கொடுக்கிலையை யரைத்து அதற்குள் மேற்படிபவளத்தை வைத்து மூடி ஏழுசீலைசெய்துகாயவைத்து நூரெருவில் புடம்போட்டெடுத்துப் பீங்கானிலிட்டு அதில் ஆவின்பால்விட்டு ரவியிற்காயவைத்து அப்பாலதை ஆலம்பழுப்பிற் கட்டி நெற்குழியில் 3 நாள் புதைத்தெடுத்து அனுபானங்களிலிட க்ஷயம் ஈளை மந்தாரகாசம் சிரங்கு சொரி முதலான மேற்காட்டிய ரோகங்கள் தீரும்.

## கல்நார்பற்பம்.

கல்நாரைச் சிறுதுண்டாய்ப் பிளந்து ஓட்டிலிட்டு அதற்குக்கீழுமேலும் கோங்கிலவப்பட்டையை இடித்துபோட்டு அப்பால்மேற்படி பட்டை கஷாயம் விட்டரைத்து 3 புடம்போடத் தவளம் போலநீறும் தேனிலாவது தூதுளை லேகியத்திலாவதுகொள்ள சிலேத்மரோகம் 96-ம் நீங்கும் மேக காங்கைதீரும் மேற்படி பற்பத்தைப் பல்விளக்கத் தந்தம் இருகும்.

## மேற்படி பஸ்பம்.

கல்நாரை சிறுதுண்டுகளாய் வெட்டி ஓட்டில்வைத்து அதற்குக் கீழும்மேலும் எருக்கம்வேரை யிடித்துத் தூளைப்போட்டு மூடி கெஜபுடம்போட்டு மேற்படி பாலிலரைத்து 3 புடம்போட்டு அனுபானத்திலிட மேற்படி வியாதிகள் தீரும் தந்தம் இறுகும்.

## சிங்கபஸ்பம்.

சிங்கியென்னும் மான்கொம்பு 5 பலம்யெடுத்து சிறுதுண்டுகளாய் நறுக்கிக் குப்பைமேனிச் சாற்றில் ஊறவைத்து மேற்படி

Digitized By Roja Muthiah Research Library

யிலையை அரைத்துக் கவசஞ்செய்து காயவைத்து ஒட்டில் பரத்தி வைத்து மேலோடுமூடிச் சந்துவாய்ச் சீலைமண்செய்து ஐம்பதெருவிற் புடம்போட்டெடுத்து ஆவின்பால் விட்டரைத்து வில்லைத் தட்டிக் காயவைத்து முன்போற் புடம்போட பற்பமாகும் அநுபானங்களில் மேற்படி பற்பத்துடன் பவளபற்பம் சேர்த்து கொடுக்க நீரடைப்பு கல்லடைப்பு சதையடைப்பு நீரெரிவு சயம் சூளைஇருமல் ஊஷ்ணம் மேக காங்கைதீரும்.

## சிலாசித்து பஸ்பம்.

கரடுயில்லாத கற்பூரசிலாசித்து 5 பலம்யெடுத்து சிறுதுண்டுகளாக நறுக்கி ஒருநாள்முழுதும் நல்ல ஜலத்தில் ஊரவைத்து மறுநாள் காலையிலெடுத்து அலம்பி இந்தப்படி ஐந்துநாள் அலம்பி யெடுத்துக்கொண்டு சிறுசெருப்படைச் சாற்றாலாட்டி பில்லைத் தட்டிக் காயவைத்து ஒட்டில் வைத்து மேலோடுமூடி சீலை மண்செய்து 50-எருவில் புடம்போட்டு ஆரியபின் யெடுத்து மேற்படி சாற்றாலாட்டி லேசாக பில்லைதட்டி புடம்போடவும் இப்படி 3-விசை புடம்போட்டெடுத்து சீஸாவில் வைத்துக்கொண்டு பித்தயெரிவு பித்தவெட்டை நீர்கடுப்பு இவைகட்கு பசும்வெண்ணெயில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## வெண்கார பஸ்பம்.

ஒரு குடுவையில் மேற்படி சிலாசித்து பற்பம் கால்தரமிட்டு அதின்மேல் சுத்திசெய்த வெண்காரமிட்டு அதற்கு மேலும் சிலாசித்துயிட்டு ஒடுமூடி சீலைமண்செய்து உலர்த்தி 10 யெருவில் புடம்போடவும் நீர்கட்டு சுருக்கு அனல் இவைகட்கு வெண்ணெயில் பணவிடை கொடுக்கவும் தீராவிட்டால் முள்ளாங்கி யிடித்த சாற்றில் இரண்டுபணவிடை கொடுக்க உடனே நீர்கட்டு உடையும் இச்சாபத்தியம்.

## இதின் உபயோகம்.

மேற்கூறியபடி அந்தந்த பற்பத்தை தனித்தனி யுபயோகப்படுத்திக்கொள்ளலாம் அல்லது சிலாசித்து பற்பம் சிங்கிபற்பம் வெண்காரபற்பம், பவளபற்பம், இவையாவும் சமனிடை கூட்டி சீசாவில் வைத்துக்கொண்டு ஒருவேளைக்கு பணவிடை யெடுத்துப் பசும்வெண்ணெயில் இழைத்துச் சாப்பிடவும் இப்படி இருவேளையும் 3-நாள்தின்றால் சகல ஊஷ்ணமும்தீரும் நீர்க்கட்டும் நீர்க்கி



Digitized By Roja Muthiah Research Library

ரிச்சுனம் வாய்வு உடம்பெரிவு யாவும் தீரும் திரேக நிதானத்திற்குத் தக்கபடி 3-நாள் 5-நாள் 7-நாள்சாப்பிடவும் இச்சாபத்தியம்.

## கஸ்தூரி மெழுகு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஸ்தூரி | விராகனிடை | க | சவ்வாது | விராகனிடை | வ |
| பச்சை கற்பூரம் | ,, | உ | பூநீக்கியலவுங்கம் | ,, | ச |
| கோரோசனை | ,, | ச | வால்மிளகு | ,, | ச |
| குங்குமப்பூ | ,, | ச | ஏலக்காய் அரிசி | ,, | அ |
| புனுகு | ,, | வ | சிறுலவுங்கப்பட்டை | | அ |

இதில் சூரணம் செய்பவைகளைச் சூரணித்து யாவுங் கூட்டிக் கல்வத்திலிட்டு கம்மாறு வெற்றிலைச் சாற்றில் ஒரு ஜாமம் அறைக்கவும் கற்பூரவல்லிச் சாற்றில் ஒருஜாமம் தூதுவேளைச் சாற்றில் ஒருஜாமம்மாட்டி நீக்கிய இஞ்சிச்சாற்றில் ஒருஜாமம் மிளகுக்கிஷாயத்தில் ஒருஜாமம் சித்திரமூலம்வேர் கிஷாயத்தில் ஒருஜாமம் மஞ்சள் கரசனுங்கண்ணிச் சாற்றில் ஒருஜாமம் இப்படி தனித்தனியாய் ஒவ்வொரு ஜாமம் அறைத்து கலுவத்துடன் நிழலில் உலர்ந்தபிறகு சுயத்தேனினுல் மெழுகுபதமாய் அறைத்து வழித்து பத்திரம்பண்ணிக்கொடுக்கவும் பயறுபிரமாணம் யெடுதது தேனில்துவட்டிக் கொடுக்கவும் இப்படி இருவேளையும் 3-நாள் 5-நாள் கொடுக்கவும் ஜன்னி, சீதளம், சுரம், கபரோகம், உப்பிஷம், மாந்தம்,முகவாதசன்னி, சூதகஜன்னி, இருமல் மாரடைப்பு, நடுக்கு வாதம் இவை தீரும் தேகதிடமற்ந்து நாள் அதிகரித்தும் குறைத்தும் கொடுக்கவேண்டியது இச்சாபத்தியம் இருக்கவேண்டும்.

---

அகஸ்தியர் அருளிய

## சண்டமாருதச் செந்தூரம்.

### நொண்டிச் சிந்து.

பரிதிமதியுதித்த—திருப்
பார்க்கடல்சூழுமிப்புவிதனிலே
பெருகைமிகப்பெருகும்—மானிடர்க்கு
பொக்குஷியாதியின்கக்குவிஷத்தை
அரிந்தேகுருமுனிவர்—மனது
அன்புடன்மானிடர்தென்படவே

Page numbering incorrect

Digitized By Roja Muthiah Research Library

திரிந்தியதோரவுழ்தம்—சண்ட
மாருதமென்றொருசெந்தூரம்
சொன்னார்வெகுசுருக்கு—பெருந்
தொல்லைகளாகியஅல்லலில்லை
முன்னால்மூலிகைச்சார்—நல்ல
முத்திடும்பட்டைகியாழமது
தன்னாலரையாமல்—ரவியில்
தாக்கிடும்வெய்யலில்வையாமல்
தானனஒட்டிலிட்டு—மூடி
சந்துவாய்சீலைகள்செய்யாமல்
புடம்போட்டுமாயாமல்—கள்ளன்
பொக்கிஷக்காலடிகண்டதுபோல்
திடம்பெற்றசெந்தூரம்—அதி
சீக்கிரம்செய்திடும்தொழில்முறைகேள்
பூரந்திசையிடையாம்—அதில்
பூட்டிடலிங்கந்திக்கிடையாம்
வீரம்வினையிடையாம்—இன்னம்
வேட்டியுகெந்தியும்வீரனிடை
செந்தூரம்ஒரிடையாம்—இதில்
சேர்ந்தசரக்கெல்லாம்சுத்திசெய்து
சந்தோஷமாகவேதான்—அம்மி
தன்னிலிருஜாமம்தானரைத்தால்
வர்ன்னப்பவழநிறம்—அதில்
வந்திடுமுந்தன்மனங்குளிர
சொர்ன்னமிதற்கீடோ—அதி
சொக்கிதுசொக்கிதுசொல்கிறேன்கேள்
திரமாகும்குப்பிதனில்—யாவும்
திரட்டியருகோணந்தன்னில்வைத்து
ஏகத்தியானம்செய்து—புட்டினில்
யேற்றும்பணவிடைசெந்தூரம்
நடுவினில்வைத்துருட்டி—நடு
நாவில்படாமல்முழிங்கிடவே

Digitized By Roja Muthiah Research Library

படுபாவிவியாதியெல்லாம்—நினைத்தால்
பரக்குமிதன்பேர்சொல்லிடவே

ஜன்னிபதிமூன்றும்—கர்மம்
தாக்கிடும்குஷ்டம்யெட்டுவகை

பின்னேழுதோஷமும்போம்—சொன்ன
பீலிகையெட்டுமகோதரம்போம்

வாதங்களொன்பதுவும்—கிட்டி
வந்திடும்பட்சம்தனுர்வாதம்

ஒதும்விரைவாதம்—வலியும்
உத்தமுடக்குநடுக்கலுடன்

அசதியும்கனுவாதம்—புண்ணு
அணைகிரந்திசூலையுடன்

கண்டத்தின்மாலையுடன்—உள்ளங்
கைதனில்ஊரல்கருமேகம்

வண்டுகடிகளும்போம்—கொடிய
வல்லபல்விஷத்தொல்லையும்போம்

சயித்தியந்தானேழும்—கொடி
தாகியயோனிபுத்துவிடும்

வயித்தியஞ்செய்கிறவன்—வலு
வாகியவியாதிக்கனுபானம்

தெரியாமல்செய்தாக்கால்—அவனை
தொடரும்வியாதினுனென்சொல்வேன்

குரையபரவனுபானம்—திரமாய்
கூர்ந்திடில்சந்தோஷமாய்விடுமே. (தந்தினத்)

## இதற்குவிபரம்.

| | | |
|---|---|---|
| பூரம் | விராகனிடை | 4 |
| லிங்கம் | ,, | 8 |
| வீரம் | ,, | 2 |
| நெல்லிக்காய்கெந்தி | ,, | 2 |
| ரசச்செந்தூரம் | ,, | 2 |

இவைகளை இங்கனம்கூறிய இடைபோல் கூட்டியரைத்தால் மாத்திரம் வாய்பிடிக்காது குழந்தைகள் முதல் சகலருக்கும் கொடுக்கலாம் மேற்படி இடைபோல்போட்டு 2-ஜாமம் அறைத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் சகலவியாதிக்கும் உபயோகப்படுத்தலாம் கைகண்டது இச்சாபத்தியம்.

Digitized By Roja Muthiah Research Library

# அகஸ்தியர் மூலிகை வயணம்.

சம்புடனேவேர்விரையை உண்பவர்தன்கிராணிமூலம்
தெம்புடனேதீருமென்று கும்பமுனிதானுரைத்தார்

சித்திரபுரத்துமூலஞ் மெத்தஆவலாய்கொணர்ந்து
சத்தாகிலும்கியாழம் வைத்தாகிலும்குடிக்கில்

பித்தமொடுசித்தமும் பெருத்ததொருமேல்வயரும்
அத்திசாரதாகமுடன் இத்தனேயுமேயேகிவிடும்

நிலவாகைவேருரைக்கில் மலேபோலேவூதுவய
றலேயாகுலேயுமது நிலேயாதுயேகும்நிஜம்

தும்பையதுதான்குடிக்கில் அம்பலத்துவேர்கொடியை
பம்பரம்போலேசூழைத்து தின்பவர்வயற்றுவிேயோம்

கரிசலாங்கண்ணிமதம் பிரியாவசியமது
கரியாமிளகோடுண்ண தரியாதுபாண்டிருமல்
அவர்பிரமேகமேயகற்றுமே.

சங்கநிலேவேர்ப்பொடியை உங்கலத்தில்மேகமெல்லாம
இங்கிதமாயேகுமென்று மங்கைபாகர்தானுரைத்தார்

தழுதாழைவேர்சமூலம் பழுவாமலேகொணர்ந்து
நழுவாமலேயரைத்து விழுதோடவேயுணர்வை

சித்தமதில்வாதமெல்லாம் மெத்தவதில்சூலேகளும்
சத்தில்லாதோடுமித மைத்தவிஷச்சூனியமும்

கொத்தானும்வேர்சமூலம் மெத்தாகவேயெடுத்து
விஸ்தாரமாயரைத்து மெத்தஆவலாயுணர்வை

கட்டுகள்வலத்துசீதம் விட்டுவிடுமேயிடுப்பில்
குட்டுவலித்தானுமது திட்டமுடன்செய்யகலும்

முக்கானனுயின்வேளே சுக்காகவேயுலர்த்தி
திக்காமலேயிடித்து விக்காமலேயருந்த

வயறுதும்பேதிகளும் சுயரூபமாஞ்சுரமும்
தயவாகவேயடங்கும் நயமாகுங்காயசித்தி
ஆதண்டத்தலேவலி யகத்துமே.

Digitized By Roja Muthiah Research Library

கொல்லன்கோவைக்கிழங்கை நல்லஆவின்பாலிலுண்ண
மெள்ளவேவிஷங்களது வில்லடைவில்லாயலோடும்

முத்தமெனும்முலமதில் மெத்தவயிற்சேடனிற்குஞ்
சத்தமொடுதாகமுடன் நிற்குமுன்னில்லாதுசொன்னேன்

இன்பூறல்வேர்சமூலம் தென்பாகவேகொணர்ந்து
தம்பிராளையேனினைந்து தென்பதாகவேயுணர்வை

கூத்திருமல்கோழைசலம் நாத்தமொடுசீயகலும்
ஆத்திவிடுமேசுவாசம் பார்த்துபதமாயுணர்வை

சிவனார்தன்வேம்புதன்னை நவநாதர்பேர்வழுத்தி
உவமாகவேயுணர்வை தவமாகுங்காயசித்தி

பங்கயஞ்செய்நீளுலகில் சங்கமற்றமூலிகைநூல்
மங்கைபாகர்சொன்னபடி சிங்காரமாயானுரைத்த
வாடாதோடை தோஷமகற்றுமே.

கொல்லன்பகவாளிவேரை மெல்லக்கெல்லியேகொணர்ந்து
நல்லக்குருணைவயரிசி மெள்ளயிடித்தேயடுப்பில்

பிட்டாகவேயவித்து மட்டாகவேயருந்த
கெட்டோம்கெட்டோமென்று விட்டோடும்மேல்வலிப்பு

பண்ணுறும்பூவுலகில் நன்னாரிவேரதனை
மின்னாரவேகொணர்ந்து தின்னாரவேயகல்நோய்

சோகைக்காமாலைபித்தம் தாகமுடனேயசத்தி
வேகமானவெப்புதோஷம் போகபிரமியந்தீரும்

கூளாத்திநெற்கள்ளியிலை மீளாதகெற்பவலி
தாளாமலோடுமென்று களாஸ்திரிநாதருரை

குப்பையெனுமேனிதன்னில் உப்பிஷங்கள்போக்கிவிடும்
அப்பையதில்கோழைசலம் துப்புறவாய்தானிருத்தும்
செப்பிய மகத்துவத்தைப்பாருமே.

பூவரசில்வேரநேகம் யேகிவிடுமேகரப்பான்
கூவிளையில்வெப்பெரிப்பு தீவினைகளோடிவிடும்

கொடிவேலியானதொரு கெடியானமூலிகையில்
துடியானஅஷ்டகுன்மம் பொடியாகுமேகிரந்தி

நெக்குன்றிநாமமதை முக்கியமுடனுரைக்க
கக்கிஷத்தலையின்நோவு மத்திநத்திலோடிவிடும்

Digitized By Roja Muthiah Research Library

தூதுவேளையானகற்பம் வேதமொளியாளேபித்தம்
வாதமொடுஈளைசத்தி தாகமொடுதாதுபுஷ்டி

சம்பிரமுடனேகவு தும்பையெனுமூலியது
வம்புபடுரத்தமூலம் தம்பனமதாகுஞ்சொன்னேன்

உள்ளபடியேயருகு வெள்ளையதின்வேர்கொணர்ந்து
மெள்ளதினமேயருந்தச் சள்ளைபிரமியதீரும்
ஆடுதின்னாப்பாளைப் புழுவாற்றுமே.

வெள்ளையெனுஞ்சாரணியில் கள்ளிவிளிநோயகலும்
முள்ளியின்கருக்குரைக்கு பல்லின்வலிதானகலும்

கற்பூரவள்ளியிலை வைப்பாகவுண்பவற்கு
வெப்பாரிக்குத்தகலும் அப்பாரில்பாண்டுவுக்கு

சூரியன்றன்காந்திதனிற் சேருப்வெப்புச்சாந்தியதாம்
மீருமறிகாந்திதனில் மேருகுளிர்ப்போர்ந்துவிடும்

கொட்டையெனுமக்கரத்தை திட்டமுடனேயுதவ
மெட்டினில்வடித்தருந்த வெட்டையதகலுஞ்சொன்னேன்.
ஆகாசக்கெருடன்விஷ மாற்றுமே.

கொம்மட்டிக்குவேரநேகம் வம்புசுரப்போடகலும்
தென்பதுறும்காயசித்தி இன்பமுடனேயறுந்த

பாசிதனில்நீர்கிரிச்சல் தோஷமொடுசூலையறும்
ஆயைகுத்துப்பாலைதனில் மாச்சுவிடுமேபரவை

வைத்தியிலூதுவயிறுண் ணத்தீருமென்றுமிக
சின்னியிலைச்சிறுசெறு தன்னில்வாரணமகலும்

கோளியாவரைதனில் நீள்சுளிகணைகளொடு
ஈளைவயிறாதல்வெப்பு கோளையாந்தகாசமறும்

சுண்டையதின்வேர்பொடியின் மண்டையதின்நீரகற்றும்
என்சொல்லியகடிகள் வண்டுகொல்லியாலோடும்

பாதிரிவேரநேகம் சாதுரிகமானதொளிர்
நாதரருள்காணுமென்று ஓதுமுனிவர்சொல்
ஆற்றரலிஅஷ்டகுன்ம மாற்றுமே.

பிச்சுபெனுமூலிகையில் பச்சைநல்லப்பாடல்கரந்து
[illegible]யுள்ளமாதருக்கு கச்சகதவாசையுண்டு

Digitized By Roja Muthiah Research Library

பூராயமானதொரு தோராதரூனியங்கள்
ஆராதாம்மதனுல் மீராதகலுங்கண்டீர்

மல்லாரையென்றும்மிக சொல்லாதநற்கனேகள்
வெல்லாதவாதமென்னும் பொல்லாதநோயகலும்

எட்டிபுடவேர்வையில் குஷ்டம்பதினெட்டுஓடும்
திட்டமுடனேவிசும் அஷ்டகுன்மமேயகலும்

நீலியுற்றவேரில்வளக் கோலியுற்றநஞ்சகலும்
வேலியுற்றமேபருத்தி யாலேபுற்றவாதமறும்

நிலவேம்பினுல்சுரங்கள் மலேவேம்பிலோடும்ஜன்னி
இலேவேம்பில்கட்டுவயர் தலேவேம்பிலுண்டநேகம்

குண்டுமணியின்கொடியால் உண்டநேகமேல்விரூதம்
செண்டுமுலேமாதர்வந்து கண்டுகொள்ளுவார்கள்நிதம்
அத்திவேர்வயிர்கடுப்பை யாற்றுமே.

குன்ணிதன்வோர்வுணவை ஜன்னியுடன்வேர்வைமெத்த
நண்ணியசுரோணிதமும் விண்ணில்கண்டோடும்சிறு

பிள்ளைநீரகட்டலும் வெள்ளைவாதங்களோடும்
தள்ளையோடாமூலியிலே மூளைநோய்கள்தானகலும்

வட்டயெனும்பிரமி தட்டதட்டச்சுரம்போகும்
குட்டியவிளாவுங் குமட்டிவரும்வாந்திசத்தி

பேய்ப்பீர்க்குலைரத்தை வாய்பார்க்கவேவுணர்வை
பொய்ப்பாயும்நஞ்சுவிஷம் சாய்ப்பாகவோடிவிடும்

பங்கதனில்மூலிகையின் மங்குசொரித்தேமல்களும்
பொங்கியண்டவாதசன்னி இங்கிதமாயேகிவிடும்

மூலிகைப்பிரயோகமே சகலருக்கும்
ஈசன் துணையாகுமே.

பார்வதிபரணியம் என்னும்
விஷவைத்திய சித்தாமணி
முற்றிற்று.



Digitized By Roja Muthiah Research Library